உ

கடவுள் துணை.

நவக்கிரகசிந்தாமணியென்னும்

# சாதகசூடாமணி

மூலமும் - உரையும்.

இஃது

மயிலம்

சுப்பிரமணியசுவாமிகளால்

பார்வையிடப்பட்டு,

சென்னை-இட்டா

நாராயணசாமிநாயுடு அவர்களது

ஸ்ரீபத்மநாபவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

க௮௯௨ ௵.





கடவுள்துணை.

## இலக்கினபாவங்களின்

# அட்டவணை.





அட்டவணை-முற்றிற்று.





உ

முருகக்கடவுள் துணை.

# சாதகசூடாமணி

## மூலமும் - உரையும்.



### காப்பு.

வஞ்சி விருத்தம்.

வெள்ளைவாரணப் பிள்ளையார்பத
முள்ளுவார்மனக் கள்ளமாறுமே.

### பிரசூதிலட்சணம்.

விருத்தம்.

உதயத்தானத்தைவிண்ணி லுடுபதிபாரானாகிற்
பதிலையத்தானிழந்துதந்தை பரகிரகத்தனென்பர்
விதியொத்தகாமமெட்டி லொன்பதில்வெய்யோன்மேவில்
வதியத்தானுபயமுள்ளோர் திரஞ்சாஞ்சஞ்சாரமானே.

இதன்பொருள்.

ஜன்மலக்கினத்தைச் சந்திரன் பாராதிருக்கில் பிள்ளைபிறக்குங்காலம் தகப்பன் அசல்வீடெனன்பன-எ-அ-கூ- இரவிநிற்க அது சரமாகில் வழியிலென்பன ஸ்திரமாகில் ஊர்க்குள் என்பன உபயமாகில் பொதுவி லென்பன-என்றவாறு. (க)

ஜென்மத்தானத்தின்மந்தன் சேர்ந்திடச்செவ்வாயேழில்
வென்மத்தான்மதிக்குமுன்பின் வெள்ளிமான்மேவினாலும்
வன்மத்தாலன்றேதந்தை வதிந்திடும்பரதேயத்திற்
கன்மத்தாலமார்க்காகக் கடைந்தெழுமமிர்தமின்றாய்.

இ-ள். இலக்கினத்திற் சனிநிற்க ஏழாமிடத்தில் செவ்வாய்நிற்கமதிக்குமுன்பின் சுக்கிரன் புதனிற்கத் தந்தை பரதேசமென்று சொல்லுவர் — எ-று. (உ)

திங்களுக்கொன்பதாறி லெட்டினிற்செவ்வாய்காரி
தங்கிடிற்பிள்ளையைத்தாய் தவிர்த்துவிட்டொழியும்பொன்னன்
பங்கமின்மதியைப்பார்க்கி லுநயலக்கினத்தைப்பார்க்கிற்
சங்கணிகரத்தாய்வாழ்நா டழைத்திடுஞ்சுகியுமாவள்.

இ-ள். சந்திரனுக்கு-௯-௬-௮-ல் செவ்வாயுஞ் சனியுங்கூடிநிற்கிற் தாய்பிள்ளையைத் தவிர்த்துவிடுவாள் சந்திரலக்கினத்தை அல்லது ஜன்மலக்கினத்தை வியாழம்பார்க்கில் நிறைந்தஆயுசுஞ் சுகஜீவியாய் இருப்பள்—எ-று. (௩)

தனுவினினின்றதிங்க டன்னைச்சேய்சனிபார்த்தாலுங்
கனிவித்தாயைப்பிள்ளை காண்கிலன்மதிக்காயத்தில்
வினையிய சனியுஞ்சேயு மேவிடமதியைநற்கோள்
மனுவொடுநோக்கின்மைந்தன் மறுதாய்கைவசமாய்வாழ்வன்.

இ-ள். தனுவில்நின்ற சந்திரனைச் செவ்வாயாதல் சனியாதல் பார்க்கிலுஞ் சுபதிருஷ்டியில்லாதிருந்தாலும் வாலவயதில் தாய்மரணம், சந்திரனுக்கு-௰௨-ல் சனியுஞ்செவ்வாயுங் கூடிநிற்கச் சந்திரன் சுபக்கிரகங்களைப்பார்ப்பானாகில் மறுதாயின் கைவசமாய்வாழ்வன்—எ-று. (௪)

கருதியசியிற்றோன்றுங் காதலனிலக்கினத்தைப்
பருதிநோக்கிடவேதந்தை பதியினிற்பிறந்தானென்க
வருகதிர்வெள்ளிநோக்கின் மாதாவின்றேசமாகுந்
தருபகற்பிறந்தாற்றந்தை தாய்சனிதிங்கணோக்கில்.

இ-ள். ஜன்மலக்கினத்தை ஆதித்தன்பார்க்கில் தகப்பனுக்குவிட்டமனையிற்பிறந்தவன் சந்திரன்பார்க்கில் தாய்மனையிற் பிறந்தவனென்றவாறு. (௫)

தாரத்திற்கோட்களெல்லாஞ் சார்ந்துசேர்தனுவினிற்கு
நீரோத்தமதியைநோக்கி னிலைதவிர்த்தசவிற்பெற்றாள்
வரோத்தமகரகும்ப காற்களின்மதிதானேறி
லேரோத்துநிறைந்தமாதே யிருட்டினிற்பிறந்தபிள்ளை.

இ-ள். தனுவில்நின்ற சந்திரனை கிரகங்களெல்லாம் ஏழில்நின்றுபார்க்கில் பிறர்மனையிற்பிறந்தபிள்ளை சந்திரன் மகரக்கால் கும்பக்காலேறில் இருட்டுவீட்டிற்பிறந்தபிள்ளை—எ-று. (௬)

சுகத்தினிற்றிங்கண்மேவச் சூரியன்சனியன்பார்க்க
வசுத்திருள்வீட்டிற்பெற்றா ளம்புலிசனிசேலோங்கச்

சந்திரன்ராகிதோன்றச் சந்ததியிருட்டிற் * சாதக
மிகத்திருடவர்கீச மேவிடத்தரையிற்சாதம்.

இ-ள். இலக்கினத்துக்கு ௭-௯-ல் நின்ற சந்திரனைச் சனிபார்க்கில் இருட்டுவீட்டிற் பிறந்தபிள்ளை, சனியுஞ் சந்திரனுங்கூடி-௯-ல் நிற்கக் கும்பமுதற் கடகம்வரைக்கும் இருட்டுராசி அதிலே ஒருராசியிற்பிறந்தால் இருட்டுவீட்டிற் பிறந்தபிள்ளை மூன்றுகிரகம் நீசத்துநிற்குமாகில்தரையிற்பிறந்தபிள்ளை தரித்திரனுமாவான்—எ-று. (எ)

காலிராண்டிராசிதோன்றிக் காரிநின்றிடக்காமத்தி
லாலியகருமமாறி லவனிசேய்நின்றுநோக்கில்
வேலியல்கண்ணாய்சாதன் மீனத்தில்வெள்ளிநோக்கிற்
பாலியவன்னைக்கேற்ற பதியினிற்பிறந்தபாலன்.

இ-ள். மிதுனங் கன்னி மகரங் கும்பம் இதிலொன்று இலக்கினமாய் அதிற்சனிநிற்க-௭-௰-௬-ல் செவ்வாய் நின்றுபார்க்கிற் சுடு ட்டிற் பிறந்தபிள்ளை சுக்கிரன் மீனத்தில் நின்றுபார்க்கில் தாய்க்கிஷ்டமானமனையிற்பிறந்தபிள்ளை—எ-று. (அ)

குறையிலாமதனின்றேளிற் குலவியகனுவைநோக்கி
லறைதருமன்னைசுற்றத் தழகியவிடத்தில்வெய்யோ
னிறையுறைமனைபுக்தேளி லிலங்குமாயைந்திற்பொன்னே
னிறைமகவகத்துமாலு நிகழ்த்துமேவியஞ்சேர்வீடு.

இ-ள். பூரணச்சந்திர னேழில்நின்று லக்கினத்தைப்பார்க்கில் தாயினுடைய சுற்றத்தார்மனையிற் பிறந்தபிள்ளை ஆதித்தன் பார்க்குமாகில் இராஜாக்கள்மனையில் அல்லது தேவாலயத்திற் பிறந்தவன் வியாழம் பார்க்குமாகில் பூஜையறையில் அல்லது யாகஞ்செய்த மனையிற்பிறந்தவன் புதன்பார்க்குமாகிற் சித்திரமெழுதியவீட்டிற்பிறந்தவன்-எ-று.

பாவரூமவரொன்று பனிமதியுடனேநிற்கிற்
றேவராயினுமன்னைக்குத் தீவினைகொடுக்கும்பாவ
ரேவராகினுமாவேழி லிருந்திடச்சனிந்த ன்னைச்
சாவராதற்கோணேங்கிற் றவிர்த்திடுமிடர்கடானே.

இ-ள். சந்திரனுடனே மூன்று பாபக்கிரகங்கூடினால் தாய்க்குப் பீடையுண்டாம், எந்தபாபக்கிரகமானாலும் லக்கினத்துக்காகிலுஞ், சந்

* சாதகம் - சாதம்என மருவிற்று.

திருக்காமிலும், ஏழினும் நாலினும் நின்றால் தாய்மரணம், சுபக்கிரகங்கள் பார்க்கில் தோஷமில்லை-எ-று. (ய)

களக்கன்றமதிபநின்ற ராசிமுற்கூறதாகில்
விளக்கினிளிறைந்தவெண்ணெய் விளம்புவர்நடுவிற்பாதி
பளக்கருங்கடையிலற்பந் திரியுமவ்வளவேயாகு
மிளக்கமாய்பொருமியட்ட மிட்டெழுமிருதனத்தாய்.

இ-ள். பிள்ளை பிறக்கும்போது சந்திரனின்றராசி முதற்கூறாகில் விளக்கிலேநிறைந்த எண்ணெயும் முழுத்திரியுமென்பது நடுக்கூறாகிற் பாதித்திரியுமாம்-எ-று. (யக)

சந்திரமுபயமன்று பாதவனேரைதாமிற்
சாந்தனைடவேதிபக் காட்சியும்வேறுகாணு
நிரந்தரமுள்ளதாகு நின்றதிற்பாதியாகு
முருமுதயத்துக்கோளுந் திரோகாணக்கோளும்வாசல்.

இ-ள். பிள்ளைபிறக்கும்போது ஆதித்தன் சரத்தில்நின்றால் விளக்கு பேதித்து வேறேவிளக்கென்பதுதிரமாகில் முதல்வைத்தவிளக்குமுற்றுமிருக்கும் உபயமாகில் விளக்கிருந்தவிடம்விட்டு பேதித்திருக்குமென்பது இலக்கினாதிபதியும் இலக்கினத்தில் நின்ற கோட்களும் இலக்கினத்திரோகாணாதிபதியும் இவர்கள் மூன்றுபேரில் பெலவானிடதிக்கிலேவாசல்-எ-று. (யஉ)

சூரியன்சுக்கனுக்குங் கீழ்த்திசைநிலங்கத்தெற்கே
காரராவாகனுக்குங் கருதுமேற்றிசையைக்காரி
சீரியதிங்கனுக்கு சேரிலுத்தரத்தைமால்பொன்
னாரியனுக்குமென்றே யறைந்தனர்தமிழையாய்ந்தோர்.

இ-ள். ஞாயிறும் வெள்ளியும் கிழக்குத் திசையைநோக்குஞ் செவ்வாயும் பாம்புந் தென்றிசையைநோக்குஞ் சனியுந் திங்களும் மேல்திசையைநோக்கும் புதனும் வியாழமும்வடதிசையைநோக்கும் இப்படி திசையைபறிக-எ-று. (யக

காரியின்கோட்களெல்லாங் கண்ணுறிற்கலைந்தவீட்டைச்
சீர்பக்ம்ஜயநாருஞ் சிந்திரவீடுமேலாஞ்

சூரியன்றிரண்மாத்தாற் சுங்கனூதனம்பொன்னாட்சி
பூமன்றியர்லெரிந்து புதுக்கியவீடதாமால்.

இ-ள். கிரகங்களையெல்லாஞ் சனிபார்க்குமாகில் முன்கலைந்த வீட்டைப் புதித்து எடுத்தவீட்டிற்பிறந்தவன் புதன்ப ... கில் சித்திரமெழுதியவீட்டிற்பிறந்தவன், சூரியன்பார்க்கில் மரத்தாண்டவீட்டிற் பிறந்தவன் வெள்ளிபார்க்கில் புதுவீடென்பதாம் வியாழம்பார்க்கில் ஆட்சிமனையென்பர் செவ்வாய்பார்க்கில் தீயால்வெந்த மிந்தவீட்டைக்கட்டின வீட்டிற்பிறந்தவன்-எ-று. (௰௪)

மறிதளிர் துலைதேள்கும்பம் வந்ததால்வாழ்மனைக்கு
குறிகிழக்காகுஞ்சென்மங் கோதண்டமிதுனங்கன்னி
செழிகயல்சேர்மனைக்குச் சென்மமும்வடபாலாகுந்
தரிவிடைமேற்காஞ்சிங்கந் தாவுமாண்டெற்கதாமே.

இ-ள். மேடம் கர்க்கடகம் துலாம் விருச்சிகம் கும்பம் இந்தராசியிலே ஒன்று ஜென்மமாகில் வீட்டிற் கிழக்கடைவப்பிறந்தவன் தனுசுமிதுனம் கன்னி மீனம் இதிலொன்று ஜென்மமாகில்வீட்டில்வடக்கடையப்பிறந்தவன் ரிஷபமாகில் மேற்காமென்பது சிங்கமாகில் தெற்காமென்பது-எ-று. (௰௫)

இலக்கினமுதலாய்த்திங்க ளிருக்குமவ்வோரைமட்டுந்
தலக்கமாயிருக்குங்கோட்க டொகையதாமறையினுள்ளோர்
விலக்கருமிலக்கினத்தார் தொகையதாய்விரவுமுள்ளோ
கலக்கருமிருந்தராசி கலந்தகோள்வெளியிற்காணும்.

இ-ள். பிள்ளைபிறந்த லக்கினமுதலாய்ச் சந்திரனின்றராசிவரைக்குங் கண்டதொகைப்பேர் உள்ளிருந்தாரென்றும் இலக்கினம் இந்தராசிக்காலென்று அறுந்து அத்தொகைப்பேர் உள்ளிருந்தாரென்று சொல்வது இதில் லக்கினபெலனுஞ் சந்திரபெலனும் பார்த்துச்சொல்வது லக்கினத்துக்குஞ் சந்திரலக்கினத்துக்கும் முன்பின்னிருந்த கோட்களைக் கண்டு வெளியிற் பேர்த்தொகைசொல்வது முன்பின்னிருந்த கோட்களைக்கண்டு வெளியிற் பேர்த்தொகைசொலவது முன்பின்கிரகமில்லாமலிருந்தாய் நோக்குங்கோட்கண்டு வெளியிற் பேர்த்தொகை சொல்வது-எ-று. (௰௬)

உச்சமூலந்தன்வீட்டி லிருந்தகோளுபார்ந்தசாதி
கொச்சைநீசக்கோண்மூடங் கொண்டகோடீயரிக்கோண்
மிச்சமாய்வெளியுமுள்ளு மேவினோர்கிழ்சாதிப்பேர்
நச்சமாம்விழியாய்லக்னக் காணுதனிறமோர்டும்.

இ-ள். பிள்ளைஜெனிக்குங்காலத்தில் உச்சத்தானக்கோள் மூலத்தானக்கோள் ஆட்சித்தானக்கோள் இவர்கள்மேல்ஜாதியென்றறிவது நீசமுடன் சத்துருக்கோள் கீழ்ஜாதியென்றறிவது மித்திரக்கோள் சமஜாதியென்றறிவது, இலக்கினமெங்கராசிங்காலோ அந்தக்காலுக் கதிபதிநிறமேயென்றது அல்லது ராசியிலேநின்ற கிரகநிறமுஞ் சுபராசியாகில் ராசிநிறமுஞ்சொல்வது-எ-று. (௰௭)

இரத்தமேவெளு புச்சாமமிரத்தமேவெளுப்புபச்சை
தரத்திருபொன்பொன்வெள்ளை. தனிக்கருப்பரத்தமென்றே
யுரைத்தனர்மேடமாதி பொளியவறுகில்வெள்ளை
நிரைத்தவெண்ணிறந்தன்பச்சைபொன்னிறம்வெண்ணீருட்டே.

இ-ள். ஜென்மலக்கினம் மேடமாகில் இரத்தவர்னம், ரிஷபமாகில் வெள்ளை மிதுனமாகில் பச்சை, கர்க்கடகம் சிங்கம் வெளுப்பு, கன்னி பச்சை, துலாம் கறுப்பு, மீனம் சிவப்பு, இப்படிக்கு ராசிநிறமறிவது, சூரியனும் சந்திரனும் வெள்ளை, செவ்வாய் சிவப்பு,புதன் பச்சை,வியாழம் பொன்னிறம், சுக்கிரன் வெள்ளை, சனி ராகு கறுப்பு,கேது சிவப்பு, இப்படி கிரகநிறமறிவது-எ-று. (௰௮)

நாடியவுதயராசி திரேகாணமுதற்கூறுகிற்
றேடியசிரம்வலக்கண் செவிமூக்குத்திகழ்கதுப்பு
மூடியமேல்வாய்கீழ்வாய் மிடப்புறத்துறவுமோவாய்
கூடியகபோலமூக்குக் கூர்செவியிடக்கண்கூறே.

இ-ள். இலக்கினமுதல் திரேகாணமாகில் இலக்கினந்தலை-௨-மிடம், வலக்கண்-௩-மிடம், செவி-௪-மிடம், மூக்கு-௫-மிடம்,கதுப்பு-௬-மிடம், மேல்வாய்-௭-மிடம், கீழ்வாய்-௮-மிடம், இடப்புறத்து மேல்வாய்-௯-மிடம்-கதுப்பு-௰-மிடம் மூக்கு-௰௧-மிடம், செவி-௰௨-மிடம் - கண்-—எ-று. (௰௯)

கூறியஜென்மராசி லக்கினநடுக்கூறுகின்
மீறியகழுத்துத்தோள்கை மேவுரம்விலாமேற்குக்கி
மாறியவுந்திமேலாம் வயிறுகைகீழுமாங்கை
தேறியவுரைந்தோள்கண்டந் தெரிவதாய்ச்செப்புவீரே.

இ-ள். பிள்ளைபிறந்தராசி நடுத்திரேகாணமாகில் இலக்கினம் கழுத்து-௨-மிடம் தோள்-௩-மிடம்-கை-௪-மிடம் மேல்வாய்-௫-மிடம் விலா-௬-மிடம்-மேல்வயிறு-௭-மிடம் நாபிக்குமேல் வயிறு-௮-மிடம இட

துவிலாப்பக்கம், கூ-மிடம்-கை, ம-மிடம்-உரம், மக-மிடம்-தோள், மஉ-மிடம்-கண்டம்-எ-று. உம

செப்பியஜென்மராசி யந்தியஞ்சென்மமாகி
லப்புறுதொப்புளாதி சகலமாண்குறியோடேறு
வைப்புறுசானுச்சங்கம் வருபதமிடக்கால்சங்க
தப்புறச்சானுவூரு சகனமாண்குறியாய்ச்சாற்றும்

இ-ள், பிள்ளைபிறந்தராசி கடைத்திரேகாணமாகில் இலக்கினத்தொப்புள், உ-மிடம்-வலதுசக்னம், ங-மிடம்-ஆண்குறி, ச-மிடம்-தொடை, ரு-மிடம்-முழங்கால், சு-மிடம்-கணைக்கால், எ-மிடம்-இரண்டுபாதம், அ-மிடம்-இடதுகணைக்கால், கூ-மிடம்-முழங்கால், ம-மிடம்-தொடை, மக-மிடம்-சகனம், மஉ-மிடம்-ஆண்குறி என்றவாறு. உக

எந்தத்தானத்தில்வெய்யோ னிருந்தனனத்தானத்தாற்
பந்தித்தநாற்காலாலும் பனிமதிக்கொம்பாலீரிற்
சந்தித்தசெந்துவாலுந் தரைமகன்சத்திரத்தீயாற்
புந்திக்குமண்மரத்தாற் புண்புகர்சனியுங்கல்லே.

இ-ள், பிள்ளைபிறந்தராசி மூன்றுந்திரேகாணத்தில் இன்ன திரேகாணமென்றறிந்து உடலை மூன்றுவகுப்பாய்ச்சொன்னதிலே எந்ததானத்திற்சூரியனநின்றானோ அந்ததானத்தைமரத்தினாலே பீடை நாற்கால் ஜீவனாலும்பீடைதழும்புசந்திரனுக்குக்கொம்பினாலும் ஜலஜெந்துவாலும் பீடைசெவ்வாய்க்குத்தீயுங்கருவியினாலும்பீடை புதனுக்கு மண்மரத்தினாலும் பீடை வெள்ளிக்கு கொட்டுகிற ஜெந்துவினாலும்பீடை சனிக்குகல்லினாலே பீடை என்றவாறு. உஉ

அம்புலிமால்பொன்சுக்க னரியக்கோளாய்நின்ற
னம்புமுன்சொன்னதான நசைபெறமறுவுண்டாகும்
வெம்பியகோட்கணின்றால் விரணமுந்தழும்புமேவுங்
கம்புலாமிடற்றாய்ராசி கண்டுமுன்னிடையிற்காட்டும்.

இ-ள், செனித்தபிள்ளைக்கு முன்சொன்ன அவயவங்களிலே பூர்ணச்சந்திரன் புதன்வியாழம் வெள்ளி இவர்கள்சுபராசியடைந்து பெலமாய் நிற்பாராகில் அழகியமறுவுண்டாம் ஞாயிறு-செவ்வாய் சனிநிற்பாராகில் அவர்களுக்குச்சொன்ன கருவியினாலே புண்தழும்பு வடுவுண்டாம் திராசியாகில்பிறக்கும்போதுண்டா

உ

ம் சரராசியாகில் அல்லதுஉபயராசியாகில் நின்றகிரகத்திற்கும் பிறந்தபிறகு மறுவுண்டாம் இது அவர்களுடையதிரேச சித்திரங்களிலுண்டாம்-எ-று. ௨௩

ஏழினிலெட்டிராறு றிவையினிற்குறைந்ததிங்கட்
டாழ்வுறுசுபர்களோடே தங்கிடத்தனக்கோணக்கப்
பாழ்படக்கேந்திரத்திற் பதிந்திடப்பாவரோடே
சூழ்மதியாறெட்டாகிற் றேன்றல்சாந்துணிந்துசொல்லே.

இ-ள், பிள்ளைபிறந்த லக்கினத்துக்கு-எ-ல்அ-ல்-௰௨-ல்-ஜீரண சந்திரன் பாவரோடேகூடி நிற்கச்சுபகேந்திரமில்லா திருக்கப்பிள்ளை மரணம்-என்றவாறு. ௨௪

சந்ததிதோன்றராசிக் கதிபதிசதிசெய்கோளோ
டுய்ந்திடுமவரிற்றோற்கிலுருபாலனுடனேசாவாம்
வந்தசேய்க்கேழிற்பாவர் வந்திடவாழ்ஜென்மத்திற்
றந்திகெட்டழிந்ததிங்கள் சார்ந்திடப்பாயுன்சாவாம்.

இ-ள், பிள்ளைபிறந்தராசிக்கதிபதிபாவக்கோளுக்குயுத்தத்திலே தோற்கில் பாலன் உடனேமரணம் அல்லது லக்கினத்திலே பாவக்கோளுடனேசமசந்திரநிற்க அ-ல்-எ-ல்-பாவாள்நிற்கச்சுபன் பாராதிருக்கப் பிள்ளை மரணம்-எ-று. ௨௫

செருக்குஞ்சிங்கமுதலாறிற்சேர்ந்தகோட்கள்வருங்கோளைப்
பெருக்கவெல்லுங்குடமாதி பாறின்றபெருநகோளை
விரிக்கில்வருங்கோளவைவெலலும் வெற்றிதோல்விமெல்லியலா
யுரைக்கில்வெற்றிபுகர்தெற்கே யொழிந்தால்வெற்றிவடக்குறிலே.

இ-ள், கிரகயுத்தம்வெற்றி தோல்வியறிந்து சிங்கமுதல் ஆறுராசியிலே நின்றகோட்கள் வருங்கோட்களைவெல்லும் கும்பமுதல் ஆறுராசியிலே நின்றகோட்களை வருங்கோட்கள் வெல்லும் கிரகயுத்த சங்கையறியும்படி எந்ததானத்துக் கதிபதியானாலும் ஒரு கிரகத்துடனேகூடி ஒரு ராசியிலிருந்து ஒருகாலேறிற் கிரகயுத்தமுண்டு இருவரிற்றோற்றவன் எந்ததானத்துக்கதிபதியோ அந்த தானம் நாசமாம்-எ-று. ௨௬

சந்தித்தகாலேழெட்டிற் றருபத்திற்பாவரோடே
வந்திக்குமதிநின்றானு மையத்தின்மதிநின்றாலுஞ்
சிந்திக்குந்தீக்கேழெட்டிற் றீக்கோட்கள்சேருமாகி
லந்திக்குமுன்னேபால னன்னையோடழியுமாதே.

இ-ள், பிள்ளைபிறந்தலக்கினத்திற்கு ச-எ-அ-௰-ல் சந்திரன் பாவருடனே கூடிநின்றாலும் இந்தத்தானங்களில் பாவர்நடுவே மதிநின்றாலும் திக்கு-எ-அ-ல், பாவர் நின்றாலும் தாயும் பிள்ளையும் மரணம்-எ-று. உஎ

ஓரையிலொழுக்கந்திங்க ளுதித்திடவுயர்ந்தநற்கோள்
பாராவைதானின்றிப்பாவர் பத்தினிலாறிற்பார்க்கக்
காரைவென்றிருந்தகோதை கயல்விழிமானேகால
னூரையுமவனிதங்க வரைக்கணமவன்பொருந்தான்.

இ-ள், பிள்ளைபிறக்குங்காலம் ராசிகடைசியிற் சந்திரனிற்ப சுபக்கிரகம் பாராதிருக்க இலக்கினத்துக்கு-கூ-௰-ல்-பாவர்நிற்கப் பிள்ளை மரணம்-எ-று. உஅ

மேடந்தேளரிசான்மாறு மிவையினில்விளங்குந்திங்கள்
கூடவெட்டதனிற்செவ்வாய்குறுக்கிடக்கொடுங்கோனோக்க
வீடழிந்துடனேதாயு மெச்சமுங்கருவியாலே
பாடுறுமுதியோர்முன்னே பகர்ந்தனர்பரிந்துமாதே.

இ-ள். பிள்ளைபிறக்குங்காலம் மேடம்-சிங்கம்-விருச்சிகம் மகரம் கும்பம் இந்தராசியொன்றிலே குறைந்த திங்கள் நிற்க அந்த திங்களுக்கு எட்டில் செவ்வாய் நிற்க திங்களைப் பாபக்கிரகம்பார்க்கப்பிள்ளையும் தாயும் கருவியினாலே மரணம்-எ-று. உகூ

விரித்திடுமோரைதன்னி லிதுமேவச்செவ்வாயெட்டிற்
றரித்திடச்சுபத்தில்வொய்யோன் சார்ந்திடவியத்திற்கரி
பரித்திட்டநற்கோனோக்கும் பாழ்படப்பிறந்தபாலன்
மரித்திடுமுடனேநீல மலர்விழியனையமானே.

இ-ள், பிள்ளைபிறந்தலக்கினத்திற் சந்திரன் நிற்க-அ-ல்-செவ்வாய் நிற்க-கூ-ல்-ஆதித்தன்நிற்க ௰உ-ல் சனிநிற்க சுபக்கிரகம் பாராதிருக்கப் பிள்ளைமரணம்-எ-று. கூ௰

ஐந்தொன்பதீராறேழி லாயுதத்தானத்திலொன்றி
லைந்தின்பங்குறைந்ததிங்க ளசக்கோளுடனேநண்ண
வந்தின்பந்தாராதுரைத்தன் மணமால்சிவன்வெள்ளி
தந்தின்பநோக்குண்டாகிற் றணிந்திடுமிடர்கடானே.

இ-ள், பிள்ளைபிறந்தலக்கினத்தில்-௫-௭-௯-௰௨-இந்த தானங்களிலே குறைந்ததிங்கள் பாவருடனேகூடி நிற்கப்பிள்ளைமரணம் இந்தச் சந்திரனைச் சுபக்கிரகம்பார்க்க மரணமில்லை-எ-று. ௩௧

சீரியலறிந்தநூலோர் தெளிந்ததாமரிட்டகால
மாரியலறியவேண்டி லம்புலியோடும்வெங்கோட்
சூரியன்முதல்பாகக்கோட் டோர்ந்தவர்பெலத்தைக்கண்டு
காரியற்குடிலவ்வோரை மாதகாட்கழித்தார்கற்றோர்.

இ-ள், இதுவரையில் பாலாரிட்டஞ் சொன்னவைகளுக்கெல்லாம் மரணகாலமறியவேண்டி சூரியன் முதலாயுள்ள பாவக்கோட்களிலே எந்தப்பாவக்கோள் பெலவானென்றறி பெலமுடைய பாவக்கோள் சந்திரனுடனே கூடியிருந்தாலும் சந்திரனைப் பார்த்தாலும் அந்தப்பாவக்கோள் இராசிமாதம் அந்தப்பாவக்கோளென்று மகாவிராசிமாதம் அவனின்றநக்ஷத்திரம் அவைகளிலே பிள்ளைமரணம்-எ-று. ௩௨

பிரசூதிலட்சணம்.

பாலாரிட்டம்-முற்றுப்பெற்றது.







கடவுள்துணை.

# பாவப்பொது.

ஆட்சியாமுச்சமூல மவரவர்தானின்றானிற்
காட்சியாம்பலன்களாகுங் கைவரும்புராணமாகுந்
தாட்சியாய்நீச்சமூடர் தருவிருபகைவீடானிற்
சூட்சயாம்பலன்களற்பந் துன்பமேதுடருங்கோட்கள்.

இ-ள், யாதொருகோட்களாட்சியுச்சமூலத்திரிகோணம் அதிநட்பு நட்புவீடாயிருந்தாலும் இந்தக்காலேறினாலும்அவர்கள்கொடுக்கிற பலன்மிகுதியும் வாதனையாதொருகோள் சூரியனுடனே கூடி அஸ்தங்கிதமானாலும் நீசமாய் அதிசத்துருவாயிருந்தாலும் அற்பபலன்கொடுக்கும் என்றவாறு. ௧

நீசராசியிலேநின்ற கோளுச்சமூலக்காலில்
வாசமாமரைப்பலன்கண் மத்திபமுச்சமூலத்
நீசராய்நின்றுநீசக காலேறினுமீவர்
தாசராயுலகந்தாந் தானமுமகலுநீசம்.

இ-ள், யாதொருகிரகங்கள் ஜெனிக்குங்காலத்தில் நீசராசியிலே நின்று உச்சக்காலேறில் அவர்களுக்கு மத்தியில்பாதிபலன் கொடுக்கும் உச்சமூலராசியிலேநின்று நீசக்காலேறினால் கடைசியிலேபாதிபலன்கொடுக்கும் இருந்தராசியுமேறுங்காலம்நீசமாகில் அந்தக்கிரகபலன் இடருகிய கெட்டபலன் கொடுக்கும் அல்லதுவறுமையும் லோகநிந்தனையு முண்டாம்-எ-று. ௨

உச்சமூலந்தன்னாட்சி யுறுமதிநட்புநட்பு
மிச்சமாஞ்சமமென்றைக்கும் பகையிலங்காக்
கொச்சையாநீசமென்றே கொள்கையீந்திடவேகோட்கள்
கச்சணிமுலையாய்நின்ற கதிபலன்கண்டுசாற்றே.

இ-ள், கிரகங்களுக்குப் பெலாக்கிரயம்றியும்படி உச்சமூலராசி ஆட்சிநட்பு நட்புச்சமன் சத்துரு அதிசத்துருநீசம்இந்தவொன்பதுமறியவும்-எ-று, ௩

உற்பத்தியும்மாதி பெலன்கடான்முழுதுமூலங்
கற்பித்தரோன்றுமுக்காற் றனதனைகால்னைக்கால்
விற்பலதிகாலனைக்கான் மேவுமாகாணிமின்னே
வற்பித்தசத்ருநீச மனைக்காணிவகையிற்காணே.

இ-ள், உச்சத்துக்கு பூரணபெலன மூலத்துக்கு முக்கால்பெலன் ஆட்சிக்கு அனைபெலன் அதிமித்திரனுக்கு காலேயரைக்கால்பெலன் மித்திரனுக்கு கால்பெலன் சமனுக்கு அரைக்கால்பெலன் சத்துருக்கு மாகாணிபெலன் அதிசத்துருவுக்கு அரைக்காணிபெலன் நீசனுக்கும் அது இந்தப்படியே கோட்களின் பெலனறியவும்-எ-று. ௬

துலங்கியேபெருக்கவாமூஞ் சுமுகனுஞ்சொந்தவன்ன
நலக்கொளுமனங்களிப்பா ஞாயவுளாத்தன்சாந்தன்
கலங்கிலாஹுயர்ந்தசத்திக் காதிபல்ஹுயிரைக்காய்வன்
வலங்கொண்மெய்யன்னதுட்டன மனப்பயனடைவுமாதே.

இ-ள், உச்சமாதியாகப்பலன் சரீரகாந்தியும் வெகுசெல்வமுமுடையன் மூலத்துக்குச்சஞ்சாரமில்லாம லிருப்பிடத்திலே சுகசீவனமாம் ஆட்சிக்குச்சுகசேரபன்புருஷன் அதிநட்புக்குச்சாந்தன் ஞாயகுணசீலன் நட்புக்குத்திடகுணசீலன்சமனுக்குப்பலபீடைபண்ணிச் சீவனம்பொருகையான் சத்துருவுக்கு அங்கத்திற்குறையுள்ளான் அதிசத்துருவுராசிக்கு சகலஜனவிரோதி துஷ்டண்நீசராசிக்கு வறுமையுமனப்பயமுமுள்ளான்இந்த அடைவே கோள்களறிய-எ-று. ௭

சாந்தனேமூன்றுகூறுய்ச் சனித்தபேர்முற்கூறுகில்
வரந்தருபெலன்கண்மீறு மையமத்திமமாறி
னிரந்திடுமதமதாகு மிகழ்கதிர்மூன்றினுக்குங்
காந்திடுமதியேயேறுங் கடையின்மத்திமமாய்க்காணும்.

இ-ள், ஜெனித்தராசி சரராசி மூற்கூறுகில்வெகுஉத்தமபலன் நடுக்கூறுகில் மத்திமபலன் கடைக்கூறுகில் அதமபலன் திரராசிக்கும் இப்படி அதமம் உத்தமம் மத்திமம்-எ-று. ௮

சகத்தினுளுபயமுன்னே தனையதாஞ்சனியேபார்க்கி
விகத்தினிற்பலன்களெல்லா மத்திமதுடையிற்றுடசி
சுகத்தினையருளுமீறிற் சொல்லியராசிமூன்றும்
வகுத்தனர்வராகமோனை வடமொழிவழுத்துநூலோர்.

இ-ள், உபயராசிக்கு முற்கூறு மத்திமபலன் நடுக்கூறு அதம பலன் கடைக்கூறு உத்தமபலன் இந்தவகையால் சரந்திரமுபய மூன்றுவகைராசிக்கும் அறியவும் அந்தராசியிலே நின்றகோளுக் கு இந்தபடிவே பலன் சொலவது-எ-று. ௭

ஆறினையெட்டைமற்றை யீராறையடைந்தகோளு
நீறுமாறெட்டீராறுங் கோளொடுநின்றகோளுஞ்
சிறியபகைநீசத்திற் றீக்கோளைச்சேர்ந்தகோளு
மூறிடுமென்பதல்லாற் பயனென்றுமுதவிடாதால்

இ-ள், யாதொருகோட்கள், சு-அ-௰உ-ல்-நிற்கினும் இந்தத்தா னத்துக்கதிபதியுடனே கூடினகோளும் பகைநீசவீட்டிலிருந்த கோளும் விபரீதபலன்களைக்கொடுக்கும்-எ-று. ௮

எந்தத்தானத்துக்கேனும் பலன்சொல்லவேண்டுமாகி
லந்தத்தானத்தையன்றோர் லக்கினமாகவைத்து
பந்தித்தவோரையாதி பன்னிருதானத்துள்ளுஞ்
சிந்தித்துப்பலன்களெல்லாந் தேறியேயறியச்செப்பே

இ-ள், பன்னிருதானத்துக்குப் பலன் சொல்லவேண்டுமாகில் அந்ததானத்தையுந் தானாதிபதியையும் லக்கினமாகவைத்து பா வாதிபதியையும் பாவத்தையும் பார்த்துசொல்வது-எ-று, ௯

அதிபன்காரகனுமென்ன வறைந்திடுமிவர்கடாமு
முதயத்தானுக்குமுமிக்க வுறவுண்டேற்பயனுமுண்டாஞ்
சதிசெய்சத்துருவேயாகிற் பயனுஞ்சத்துருவாமென்பர்
மதிஆதன்மாதேயுச்ச முதயனேற்பலனேநல்கும்

இ-ள், உதயநாதனுக்கு யாதொருபாவத்துக்கதிபதியுங்காரகனு முறவாகில வெகு உத்தமபலன் சத்துருவாகில் விபரீதபலன் உ தயநாதனுச்சுமாகில் உத்தமபலன்-எ-று. ௰

நட்பினிலாட்சிதன்னி லுச்சத்தினண்ணினுலும்
பெட்புறநற்கோளோடும் பிரிவிலாதிருந்தானேனும்
விட்பிலாவுதயநாதன் வர்த்தனைவிரும்பிடாதே
திட்பமாம்பலன்களல்குஞ் சேயரியகமலக்கண்ணாய்.

இ-ள், யாதொருகோள் உச்சமூலம் ஆட்சி நட்புவீட்டிலிருந் தாலும் சுபருடனே கூடினகோளும் லக்கினாதிபதிக்கு நட்பாயிரு ந்தகோளும் கொடுக்கும்பலன் வர்த்தனையுண்டாம்-எ-று, ௰௧

பூண்டதானங்கட்கேனும் பொருவில்காரகக்கோட்கேனுங்
காண்டகுமுன்னும்பின்னும் கருதிபதிரிகோணத்து
மீண்டியவெட்டுந்தீக்கோளிருப்பவெங்கோட்சுனேக்கின்
மாண்டிடும்பலன்கணற்கோ னேக்கிடிற்றேடமாறும்

இ-ள், மாதுருதானத்திலும் தானத்துக்கு முன்னும் பின்னும் அந்த தானதிபதிகார காளிவர்களுக்கு முன்னும்பின்னும் தானதிபதிகாரகனுக்குத் திரிகோணத்திலே அல்லது அஷ்டமத்திலே இந்த வகைப்படிதானங்களிலே பாவக்கோள் நிற்கில் விபரீதபலன் சுபக்கோள் நோக்கில் தோஷமில்லை-எ-று. ௰௨

எண்ணியகாரகக்கோ ளியல்பெறுதானஞ்சேரி
னண்ணியபலன்களெல்லா நவையுறுமென்பர்வெள்ளி
பெண்ணிடத்தானத்தின்கோன் பெறுமகத்தானஞ்சேரிற்
றிண்ணஞ்செய்மனேவிநாச மென்றனாதெளிந்ததூலோர்

இ-ள், யாதொருதானத்துக் காரகனுச்ச நட்பாட்சி மூலமிருக்கிலும்வெள்ளி பெலத்துடனிருந்தாலும் அந்தபாவம் வர்த்தனை ஐந்திற்குடையவன் ஏழிற்நிற்க தாரத்துக்கும் புத்திரனுக்கும் தோஷமுண்டு-எ-று. ௰௩

கொள்ளுந்தானங்கடம்மைக் கூறியதானத்தின்கோ
னுள்ளகாரகனற்கோனோடுந் திரிகோணந்தன்னில்
விள்ளருங்கேந்திரத்தில் வீறுடுசிற்பாராகில்
வெள்ளருமந்தத்தானப் பலனியில்பெய்துமாதோ

இ-ள், யாதொரு பாவாதியாகிலும் அதற்குக்காரகனுகிலும் கேந்திரத்திரிகோணங்களிலே சுபானுடனே கூடிபெலத்து நின்றால் அந்தபாவபலன் உத்தம்பலன் கொடுக்கும்-எ-று ௰௪

மாதராய்த்தானத்தின்கோள் வழுவில்காரகனுகங்கோட்கள்
கோதிலாதொருவன்சன்ம லக்கனத்திரிகோணம்பற்றி
பாதியாய்க்கண்டந்தன்னி லணையுமப்பலன்களெல்லா
நீதியாயவனேச்சூரும் லெக்கினேசனேயுநேர்வார்

இ-ள், யாதொருபாவாதிகாரன் கேந்திரத்திரிகோணத்தில் நிற்க அந்தபாவம் உத்தமபலன் லக்கினேசன் கொடுக்கிறபலன் முன்கொடுக்கும்-எ-று. ௰௫



மாயமேழிரண்டின்ளோனு மவர்தமையடைந்தகோளும்
காயுமாலெட்டினுள்ளோன் கானகைகாட்டுமன்றே.

இ-ள் நற்கோள் நின்றராசிக்கதிபதிகொடுக்கும் பலன்நன்மை தீககோள் நின்றராசிக கதிபதிகொடுக்கும்பலன் தீமை உ-எ-ல் இருந்த கோளும் இவரைக்கூடினகோளும் புதனுக்குஎட்டிலுள்ளகோளு நன்மைப்பலன்கொடுக்கும் எ-று உ௰

மரணத்தானத்தோனின்ற ராசிநாண்மாதந்தன்னில்
மரணத்தாற்பலகையுகோயும் வேந்தரான்முனிவுமுண்டா
மரணத்தாம்விடு பொன்னு மழிந்துசாந்துயரில்வீழ்வார்
தருணந்தார்சொன்னநீதி தனித்திருவனையமாதே

இ-ள் ஜென்மலக்கினத்திலே அஷ்டமாதிபதி யாதொருநட்சத்திர ராவமில் நின்றானோ அந்தநக்ஷத்திரமும் அந்தமாதமும் கஷ்டபலன் எனறவாறு உக

பன்னிருதானத்துக்கும் பலஞ்சொல்லும்பண்புகூறி
துன்னுமோர்தானந்தன்னி லுறைந்தவனதிபன்பார்த்தோன்
மன்னுகாரகனென்போரால் வருபலன்வகுக்கலாகு
முன்னுந்தானத்திராறன்மொழிவைபொன்னவைகண்முற்றும்

இ-ள் பனிரண்டுதானத்திற்கும் பலன்சொல்லவேண்டில் அந்தந்தபாவத்தில் இருந்தகோளைப்பார்த்து அக்கோள்காரகன் இவருடைய பெலமறிந்து சொல்லுவது எ-று உஉ

தானந்தாற்சொல்லவேண்டுந் தற்க லபலன்கவெல்லா
ஞானந்தால்வருவதெல்லா மிரண்டினுளவிலாப்பாற்றே
மானத்தால்வியாழநின்ற தானம்வர்த்தனையாய்நோக்கும்
பினந்தான்சனிசேர்தானும் பெனல்கெடும்பிணடநோயால

இ-ள் நன்மைதீமை அறியவேண்டில்வியாழம்நின்றராசியைக்கொண்டுசொல்லும்பலன் வெகுஉத்தமம்சனிநின்றராசியைக் கொண்டுசொல்லும்பலன் மத்திபம் எ-று உங

தனகாதனுறெட்டிரா றெனுமொன்றிற்சாரச்சாரு
மினவோனாதனேசேருந் தானங்கள்கெடுமேபாக்கிற்
லுனிபாகுந்தியொராறெட்டிராநேற்றுடருந்துனப
முனியாதநற்கோளாறெட்டிராறேன்புனிவுதின்னம்

இ-ள் இரண்டாமிடத்துக்குடையவன் ௬-அ-௰௨-ல்நிற்கிலும் இலக்கி னதிபதி ௬ ௬-௰௨ ல்நிற்கினும் அல்லதுபார்க்கினும் தீமைப்பலன்பாப க்கிரகங்கள் ௬ அ ௰௨-ல் நிற்கில்நன்மைப்பலன் எ-று ௨௪

அர்த்தனைந்தனைக்கொன்றைந்தி லரும்புகர்தனக்கொன்றேழிற்
மூந்திய திரிகோணத்தின் முறையினற்கோட்கள்சேர்நாண்
மைந்தருமனைவிதானும் வருமச்சநாளிற்காரி
தொந்தமாங்காலமன்றோ துயர்கடன்முடிக்கும்வாறே

இ-ள் வியாழத்துக்கு க-ரு-ல் சுக்கிரனுக்கு க-எ-ல் திரிகோணக்கோ ட்கள் சேருநாள்மைந்தரும் மனைவியும்வரும் அந்நாளிற்சனிவரில் துயர மென்பது எ-று ௨௫

இனசக்கதிபதிக்கானாலுஞ் சென்மலக்கினத்திற்கேனுந்
தசைக்குமூன்றெட்டிரா றாகியதானந்தன்னுள்
வசிகருங்கோளவாகளோடு வதியுங்கோளேனும்வந்து
பொசிக்குநாட்கேடேயன்றி மரணமும்புகலலாமே

இ-ள் ஜென்மலக்கினத்துக்கானாலும திசைநாதனுக்கானாலும் ௩-௬-அ ௰௨-க்கு உடையவர்களுடைய திசைஅபகாரசித்திரமு மவர்களுடனே கூடினபேர்களுடைய திசைஅபகாரசித்திரமானாலும் வந்தால் வெகுகஷ் டபலன் அன்றியும்மரணம்வரும் எ-று ௨௬

வார்மூலையொன்றுமூன்றைந் தேழிருநாலாந்தன்னிற்
சீரியகோட்களின்றித் தீயகோள்சேருநாளிற்
பாரினிற்பகரவொண்ணுத் துன்பங்கள்பலவுமெய்துங்
கோரமாமன்றேநற்ற திசைகளுங்கொடியதாமே

இ-ள் க-௩-ரு எ-அ இதிலேசுபகோளின்றி தீக்கோட்கள் வரும்போ து அவருடையதிசை அபகாரசித்திரங்களிலே கஷ்டம்வரும் இவர்களு டனேகூடின கிரகங்களின்திசை அபகாரசித்திரங்களிலும் கஷ்டமேயா ம் எ-று ௨௭

பாவப்பொது முற்றுப்பெற்றது.





உ

கடவுள் துணை

# இலக்கினபாவம்.



சிறேனுமிலக்கினேசன் மித்திராங்கிசந்திற்சேரச்
சார்வதாச்சுபக்கோள்பார்க்கிற சவுக்கியலக்கினேச
ஞரவேபெலத்துக்கேந்திர கோணத்திலாயி னல்லோர்
பார்வையேபெற்றாலாயு பாக்கியமுள்ளதாமே

இ-ள் இலக்கினேசன் பெலமாகயிருக்க கேந்திரகோணத்திலிருந்தல் வைசேஷிக மித்திராங்கிசமேறச் சுபக்கிரகம்பார்க்க தேகசவுக்கியம் லக்கினேசன் பெலமாகயிருக்க கேந்திரகோணத்திலிருந்து சுபாள்பார்க்க பாக்கியாள் பாராதிருக்கத்தேகசவுக்கியமென்பது எ-று க

உள்ளதோரிரவிதேவ லோகாங்கிசமுற்றவும்போ
லெளாரும்லக்கினாதி பெலக்கவும்பாக்கியாதி
பெண்ணவேசொச்சவுச்ச வெங்கிசமவிருமபிபேற்ப
பிள்ளையும்யோகவானாயப் பெலமுடனிருப்பதாமே

இ-ள் சூரியன் தேவலோகாங்கிசமேறலக்கினேசன் பெலமாக யிருக்க பாக்கியேசன சுயாங்கிசமேற வெகுபாக்கியமும கீர்த்தியும் பெற்றவன் எ-று உ

இருபத்தோர்லிக்கினேசன் பெலஞ்சுபவர்க்கமாறே
விருப்புடன் சொச்சமாகிக் கர்மலாபத்தானபார்க்கப்
பொருந்திபதீர்க்காயுள் புகழுடன்செல்வமுண்டாய்க்
தருந்தனிகராங்கீர்த்தி மானெனத்தழைத்துவாழவான்

இ-ள் இலக்கினாதிபதி அற்பபெலவானாயிருக்கசுபவர்க்கமேற சுபசேஷத்திரத்திலிருக்க கர்மாதிபதியாலே அல்லதுபாக்கியாதிபதியாலே பார்க்கப்பட்ட தீர்க்காசுந்தனலாபமுங் கீர்த்தியுமுண்டாம் எ-று ௩

வானெனுமிலக்கினேசன் பாவியருடனேவாழ
வினைசாருஞ்சுபக்கோள்பார்க்கிற் றேருடமேயிலலக்னேசன்
றுனமாம்பவயோகி பலகி கோணத்தன்னில்
காணெனப்பாவிபார்க்கி னுநேமேரோகியாவான்

இ-ள் இலக்கினேசன் குரூராளுடனேகூடில் தேகசவுக்கியமில்லைசுபக்கிரகம்பார்க்கில் உண்டு இலக்கினேசன் பலவீனனாயிருக்க கேந்திரகோணத்தில் பாவிகளிருக்க எக்நேரமும்ரோகமுண்டாம் எ-று

ஆமெனும்லக்கினத்திற் பாவியாய்க்குளிகனுளச்
சேமனுங்குளிகனைபார்க்கப் பாவி மிராகுநகூடத்
தாமெனுமிரவிபார்க்கப பில்விருனியத்தானமாய்வன்
மானமாஞ்சனியும்பாய்பும் வஞ்சனையாலேமாய்வன்

இ-ள் இலக்கினத்தில் பாவியிருக்ககுளிகன் திரிகோணத்திலிருக்க அல்லது இலக்கினாதிபதியுடனே கூட இலக்கினேசனுடனே பாவிகூட இராகு உதயமாகசூனியத்தினாலேமரணம் சனியுடனேஇராகுகூடி இலக்கினத்திலிருக்க வஞ்சனையால்மரணம் எ-று இ

தானவனிலக்கினத்தில் ராகுவாய்ச்சனிசேய்கூட
வீனமாம்பிரகற்பீச மெட்டினிலக்கினேச
னூனமாமிராகுகூடு விப்படியுரைத்தல்கூடும்
பானலங்கொண்டகோதாய் பார்த்திவைபகாநன்றே

இ-ள் இலக்கினத்திற் சனியுஞ்செவ்வாயு மிராகுக்கூடியிருக்கபிரகஸ்பீஜம லக்கினேசனஷ்டமத்தில் இராகுவுடனேயிருக்கபிரகஸ்பீஜம்எ-று

நன்றெனுமிலக்கினேச னிருந்திடுமிராசிநாதன்
பொன்றியராகு மாகதிகூடிடிற்பிரசற்பீஜ
மன்றியுமட்டமேச னேறுமங்கிசத்தினாதன்
றான்றியாய்வுங்கூடி லப்படிச்சொல்லலாமே

இ-ள் இலக்கினேசனிருந்த ராசிக்குடையவன் இராகுசெவ்வாய் யாதியுடனேகூடியிருக்க முன்சொன்னபலன் அஷ்டமேசன் எந்த அங்கிசமதாறினாறே அந்தஅங்கிசாதிபதி இராகுவுடனேகூடில் முன்சொன்ன பலன் எ-று எ

சொல்லியலக்கினேசன் சேயனை வதுறக்கப்
பல்லவர்பாவிகூட வன்றியும்பார்க் மாகில்
வில்வினாற்கல்லேறன்றி வசூரியால்விரணமுண்டா
மல்லதுசனியும்வண்ண மாகிலக்கினிபலாமே

இ-ள் இலக்கினேசன் செவ்வாயாகவிருக்க அவ்விலக்கினத்திலும் க்கபாவிகளுடனேகூட அல்லதுபார்க்க வில்லினாலாதலால் கல்லெறிதலினாலாதல் விரணம் அல்லது வசூரியால் விரணம்சனியிப்படியிருந்தால்வாதம் அக்கினிசத்திரமிதினால் விரணமுண்டாம் எ-று ஆ

மாந்தி குளிகன்

ஆயதோர்லக்கினாதி யங்கிசத்தானம்பொல்லாத்
தீயவர்சுபர்கள்கூடச் சுட்டமாஞ்சுபர்கள்வீட்டி
ஞயகனிலக்கினாதி யிருக்கவுமட்டமத்தின்
மாயவன்சுடர்க்கோளாகிற் சுட்டமாய்நாவில்வாமாதே

இ-ள் இலக்கினேசன் குரூரக்கிரகத்துடனே கூடியிருக்கசுட்டசரீரம் சுட்டக்கிரகங்கள் வீட்டில் இலக்கினாதிபதியிருக்க அல்லது அஷ்டமத்திலிருக்க சுட்டசரீரம் எ-று ௯

இலக்கினாங்கிசாதி யிருந்திடச்சுபர்கள்வீடாய்ச்
சொலத்தகர்சுட்டமாகுஞ் சுக்கிரன்லக்கினத்தாய்
கலத்தருசுபர்கள்பார்க்கிற் றூலமாம்லக்கினாதி
செலக்கிரகமாகல்லோர் திருட்டியேற்றூலமாமே

இ-ள் இலக்கினாதிபதியேயினு அங்கிசாதிபதி சுடர்க்கிரகத்திலிருக்க சுட்டதேகம் சுக்கிரன்இலக்கினத்திலிருக்க சுபக்கிரகம்பார்க்க தூலதேகமாம் இலக்கினாதிபதி செலக்கிரகமாகவிருக்க அல்லதுபெலவானாக யிருக்கசுபக்கிரகங்கள் கூடியிருக்கதூலமாகயிருக்கிற சரீரமென்று சொல்வதா எ-று ௰

தூலமாம்லக்கினாதி ஜெலத்திலேதோன்றவந்தப்
பாலனைச்சுபக்கோள்கூடப் பார்ப்பதாஞ்செஜலமேற்றூலம்
வாலனாம்லக்கினாதி வாழ்ந்ததுசுபர்வீடாகச்
சீலனங்கிசத்திலாதல் செலந்துறநல்லதேகம்

இ-ள் இலக்கினாதிபதி செலராசியிலேயிருக்கச் சுபக்கிரகத்துடனே கூடிசெலக்கிரகம்பார்க்கத் தூலகாயம்லக்கினம் சுபாள் க்ஷேத்திரமாகவிருக்க அல்லதுலக்கினாதிபேயின் அங்கிசாதிபதிசெலராசியிலிருக்க நல்லசரீரம் எ-று ௰௧

நல்லதாம்லக்கினத்திற் குருநிற்கவன்றிப்பார்க்கச்
சொல்லலாம்லக்கினந்தான் சொலுயெனிற்றூல்காயம்
புல்லிபசனியும்ராகும் லக்கினம்மயிற்பசாசா
யில்லுபேயிரவிசெவ்வா யிருந்திடிற்சுட்டதேகம்

இ-ள் இலக்கினத்தில்குருவிருக்க அல்லதுகுருவால் பார்க்கப்பட்டலக்கினஞ் செலராசியாகத்தூல்காயம் லக்கினத்தில்சனியுமிராகுவு மிருக்க பிபசாசகனையாயிருப்பள் லக்கினத்தில்ஆதித்தனுஞ் செவ்வாயுமிருக்க சுட்டதேகம் எ-று ௰௨

சுகமெனு லிலக்கினத்துக்குடையவனதிலேதோன்றி
யகமெனவாழ்வுற்றேறு மங்கிசந்தன்விடுச்ச
நிகரிலாத்திரேகாணத்துஞ் சுகப்பதுமேறநீண்ட.
புகர்குருமதிமால்பார்க்கிற் புகழுடன்வாழ்வன்றீர்க்கம்

இ-ள் லக்கினாதிபதி லக்கினத்திலிருந்து சோர் சேந்திரவுச்சம் ஏறி சுபத்திரேகோணம ஏறச்சுபதிருஷ்டியுண்டாகச் சனன முதல் மரணாந்தம வரைக்கும் பாக்கியமுடையவன் எ-று ௰௩

தீர்க்கமாம்லக்கினாதிலாபமேசேரநல்லோர்
பார்க்கவேயன்றிகேந்திரத்திலவிடுச்சாக
வோர்க்கவேசிங்கனுங்கிச மேறவேபொன்னவென்றான்
கூர்க்கமத்தியிலேவாழ்ந்து குணமுடனிருப்பன்றானே

இ-ள் இலக்கினாதிபதி லாபாங்கிசமேற சுபக்கிரகம்பார்க்க அல்லது கேந்திரமேறக்கேந்திரத்தில் சொந்தஉச்சனாகியிருக்கச் சிங்காசனாங்கிச மேற குருபார்க்கமத்தியிலேசவுக்கியம் எ-று

இருந்ததக்கினாதிசொச்ச வுச்சமாயினியோர்பார்க்கப்
பரந்துசோபனகேந்திரத்து பார்வதாங்கிசமேபற்ற
மருந்தெனுமந்திபோகம லக்கனகேந்திரம்பொன்பார்க்க
வருந்திலக்கினத்தான்கேந்திரத் தயிராவதங்கிசகன்றே

இ-ள் லக்கினாதிசொட்கேந்திர வுச்சமாகச் சுபக்கிரகம்பார்க்கில் ஆதி லக்கினேசன் சுபகேந்திரத்தில் இருக்கப்பார்வதாங்கிசமேறமத்தியில் சவுக்கியம் லக்கினத்தைவியாழம் கேந்திரத்திலிருந்து பார்க்கஅல்லது லக்கினாதிபதி கேந்திரத்தில் பெலத்துப்பூரணமாகவிருக்கஅல்லதுஐராவதாங்கிசமேற அவனுக்குப்புத்திர மித்திரகளத்திராதிகளுடனே மரணவரையுஞ்செல்வம் எ-று ௰௫

நன்றெனும்லக்கினாதி கோபுராங்கிசமாங்கங்க
வன்றியுந்தேவலோகாங் கிசமாகின்மத்தியந்
தன்றியபின்னுஞ்செல்வஞ் சுபர்களக்கினமாய்ப்பாவி
யொன்றியதனமாய்க்கேந்திரத்துச்சமேன்மத்தியே ம்

இ-ள் லக்கினேசனகோபுராங்கிசமேற சுக்கிரன்தேவலோகாங்கிசமேற அவனுக்குமத்தியிலேயும் மத்தியத்திலும் யோகம்லக்கினத்தில்பா

ஆயுவாம்லக்கினாதி பதிபெலாங்கேந்திரத்தாப்
மேயவர்சுப ரபார்க்கிற் றீர்க்காயுமிருத்திவில்லை
நாபகனென்னலோக நாதனைப்குணவாஞ்சி
பீவுடனறியாகிரக லட்சுமியுடையானாமே.

(இ-ள்.) லக்கினாதிபதி அதிபெலமாக இருக்க சுபக்கிரகம் பார்க் கேந்திரனாகயிருக்க மிருத்துவிமலே தீர்க்காயுசுங் குணவானுமாகி இராஜ லட்சுமியுடையவனாக இருப்பான்-எ-று. உக

உடையகன்லக்கினாதி யொன்றானாக் கேழபத்திற்
றிடமுடன்சுருமேவாடாகத் தியர்கேந்திரக்கோணத்து
மகவுடன்கூடார்பாரா ரெட்டுனுமனுகாராகி
விடமுடன்வாழ்வான் றீர்க்கவாயுளுங்கீர்த்தியாமே.

(இ-ள்.) லக்கினத்துக் கேந்திரகோணத்தில் எட்டாமிடத்தில் பா விகளில்லாதிருக்க லக்கினாதிபதியும் வியாழனும் க-ச மி-லிருக்க கீர்த்தி மானும் புண்ணியவானும் தீர்க்காயுடை வனுமிருப்பான்-எ-று. உஉ

தீர்க்கமாயலக்கினாதி கனத்திற்கர்மத்திலாகி
லேர்க்கவேலாபனோடே கூடினுமிருபதாண்டா
மார்க்குலகந்தானேறு மங்கிசன்றிரிகோணத்தாற்
கூர்க்குமுச்சத்தாலாபன் கூடமுப்பத்திரண்டே.

(இ-ள்,) இலக்கினாதிபதி தனத்திலாவது கர்மத்திலாவது இருக்க அல்லது லாபனுடனே கூடியிருக்க இருபதுவயசுக்கு சுகம் லக்கினாதிபதி யிருந்த அங்கிசபதி கேந்திரகோணவுச்சனாக லாபேசனுடனே கூடி யிருக்க முப்பத்திரண்டுவயசுக்கு பாக்கியம்-எ-று. உ௩

இன்பமாம்லக்கினாதி சுபராசியிருக்கந்த
வன்பனேச்சுபக்கோள்பார்க்க கோபுராங்கிசத்திலேற
மங்குணமறுபதாண்டு வாழுவான்லக்கினத்திற்
றன்பலமுற்றும்ரண்டா மிடப்பலஞ்சாற்றுவாமே.

(இ-ள்.) இலக்கினேசன் சுபராசியிலிருக்க சுபக்கிரகம்பார்க்ககோ புராங்கிசமேற அறுபதுவயசுக்குச் சுகம் எ-று; உச

இலக்கினபாவம்-முற்றிற்று.





உ

கடவுள் துணை

# இரண்டாம்பாவம்.

சாற்றியநாமந்தானுந் தனமுககுடும்பவித்தை
யேற்றியவிலாவின்பக்க மந்திரமிதயமுண்ணல்
கூர்த்தகண்குருவுயென்னக் குறித்துணர்வேங்கடேச
மூர்த்தியேயுரைத்தார்க்கெல்லாமுடனுன்விரிக்கலுற்றேன்.

(இ-ள்.) குடும்பம் முகம் விலாப்பக்கம் வித்தை மந்திரம் இதயம் போசனம் குரு தனம் இவையெல்லாம் இரண்டாமிடங்கொண்டு சொல்வது-எ-று. ௧

விரித்தெழுலககினேசன் வித்தையானுடனேகூடி
பரித்திடமூன்றுமெட்டு பன்னிரண்டதிலேவாழத்
தரித்தமாதனத்தான்றானு மிலக்கினனுடனேசார
விரித்திடுநயனந்தனை யந்தகனாகத்தானே.

(இ-ள்.) இலக்கினாதிபதி இரண்டாமிடமுடையவனுடனே ௩-௮-௰௨ லிருக்க உ-மிடமுடையவன்லக்கினத்திலிருக்க அந்தகனாவான்-எ-று

ஆகமாமிலக்கினத்தி லிரவியேநேசமாக
மேவகமாய்ராகுபார்க்கில் விரணமாங்கண்ணிலென்றுந்
தாகமாக்குடும்பத்தன்னிற் சனிகுசனுடனேகூடச்
சோகனுங்குளிகன்பார்க்கி லாந்தகண்ணெனச்சொன்மின்னே

(இ-ள்.) சூரியலக்கினத்தில் நேசனாயிருக்க ராகுபார்க்க எந்நேரமுங்கண்ணில்விரணமாம் உ-மிடத்தில் சனிசெவ்வாயிருக்கக் குளிகன்பார்க்க ஆந்தகக்கண்ணென்பது-எ-று. ௩

மன்னியவிரவிசந்து தனதிலாய்ராகுமந்த
னண்ணியேபார்க்கவன்று நயனமந்தமேயாகும்
பன்னுயேதத்திலான்றைப் பாவியாய்க்குடும்பநாதன்
வன்னியம்பாவிகூடத் தூரமேதெரியதாமே.

(இ-ள்.) சந்திரனும் சூரியனும் இரண்டாமிடத்திலிருக்க இரண்டாமிடமுடையவன் பாவியுடனேகூடிச் சுபக்கிரக திருஷ்டியில்லாதிருக்க தூரம்வருவது தெரியாது அரைபபார்வை ரோகநேத்திர மென்பது எ-று. ௪

தெரிதருநேத்திராதி செல்லுமங்கிசத்துநாத
னரியனும்பாலர்வீட்டி லிருக்கவும்பாவியாகி
மரிவினுங்கேதுமாந்தி நேத்திராதிபனுங்கூட
வுரியதாங்கண்ணிலென்றும் விரணமேயுடையதாமே;

(இ-ள்.) நேத்திரஸ்தானாதிபதி ஏறின அங்கிசாதிபதி பாபக்ஷேத்திரத்தில் பாவியாயிருக்க நேத்திராதிபனுடனே கேதுகுளிகன்கூடநேத்திரவிரணம் எ-று. ௫

தாமெனுமிரவிசேயுந் தனத்திலாய்ச்சுபர்பார்பாரே
பூமன்கணர்த்தமாகும் புகன்றிடு யனத்தானுஞ்
கோமனுஞ்சுபரேகூடக் காரகஞ்சுபர்பார்க்கத
தேமலிநயனமென்றுந் தீர்க்கமாயிலங்குந்தானே.

(இ-ள்.) சூரியனுஞ்செவ்வாயும நேத்திரஸ்தானத்திலிருக்க சுபக்கிரகத்திருஷ்டி யில்லாதிருந்தால் இரத்தக்கண் நயனாதிபதி சவுமியனுடனேகூட காரகன்சூரியனைச் சுபாள்பார்க்க நல்லகண்-எ-று. ௬

இலங்கியகுடும்பநாத னுச்சசொ சேத்திரத்திற்
குலங்கிளர்சுபரேகூடப் பாரகமாக்குடும்பியாவன்
பெலம்படுத்தனத்தானுச்சச் சொச்சனுப்பெரியோர்பார்க்க
நலந்திகழ்லக்கினாதி யவ்வணமாகன்றே,

(இ-ள்.) குடும்பநாதன் சவுமியனாயிருக்க உச்சசொட்சேத்திரனாயிருக்கசவுமியாள் கூடப்பார்க்க வெகுகுடும்பரக்ஷகனாகவும் வாக்குக்காரனாகவுமிருப்பான் குடும்பாதிபதி சொட்சேத்திர வுச்சனாகசுபக்கிரகம் பார்கக லக்கினாதிபதி உச்சச்சொட் சேத்திரனாக அனேககுடும்பரக்ஷகனாக இருப்பான-எ-று. ௭

நன்றெனுந்தலத்தில்வியாழ மாதிடர்நல்லோர்பார்க்க
வன்றியும்பிரசேயுச்சச் சேத்திரமதனிலாக
வென்றிகொளரசனாக வெகுசனரக்ஷகன்றான்
மன்றினிற்கீர்த்திபெற்று வாழுவான்குடும்பியாமே.

(இ-ள்.) குடும்பத்தில்வியாழம்நிற்கசுபாள்பார்க்க பிருகுஉச்சசொட்சேத்திரத்திலிருக்க பரோபகாரியாய் வெகுசனரட்சகனுவன்-எ-று. ௮

குடும்பத்திற்பாபியாகிக் குடும்பனுமெட்டிலேயு
மடைந்திடலக்கினாதி யப்படியாகிற்றுக்க
மிடம்படுப்பாபிரண்டி லிருக்கவுமிலக்கினாதி
தொடர்ந்தவேயாரெட்டாகிற் றுக்கியாய்பபொசிப்பிலானே,

உம்பர்கோன்வியாழஞ்சிங்கா சனங்கிசமுவந்துவாழ
கம்பனு மயிருந்பால கோபுராங்கிசமுதைகண்ண
வம்புயத்தனத்தானமேலா யயிராவதாங்கிசமேறத்
தம்பமாயளவில்லாத தனத்தினுக்குடையனுமே.

(இ-ள்.) குருசிங்காசனங்கிசமும் சுக்கிரன்ஐந்துக்குடையவன்இவர்கள் கோபுராங்கிசமும் சந்திரன் இரண்டாமிடத்திற குடையவன் இவர்கள் ஐராவதாங்கிசமும பெறில் அளவிறந்த தனம்பிராபதி யடையவனுகும் எ-று. ௰௪

தனத்தினுன்சலத்திலாகச் சதுர்த்தவன்சலவானுகச்
சினத்தெழுங்கர்மந்தானுஞ் செலராசியுடையனுகிற்
கனததிரிட்சேபயோபக் கைவந்துகர்யவானு
யனைததுடன்கூடிவாழு மலரவனகறந்ததன்றே

(இ-ள்.) இரண்டாமிடத்திற் குடையவன் நாலாமிடத்திற் குடையவன் ஜலராசியிலிருந்து பத்தாமிடத்திற்குடையவனும் அப்படியாகில் நிதிநிட்சேபலாபம் உண்டாகி சுகஜீவியாய்வாழ்வன் எ-று, ௰௫

சேர்ந்திடுமுகத்தானத்தான் கேந்திரபாகஞ்செல்ல
வார்ந்திடுமுகத்தானத்திற் சுபர்களேவாழவந்த
சரந்தணிகுழலாய்நல்ல முகமொடுதனவானுவான்
பாரந்தண்மேற்கிடந்தபாருட் பரியவனமுகுவயந்தே

(இ-ள்.) இரண்டாமிடத்திற்குடையவன் கேந்திரத்திலிருக்க மேற்படி இரண்டாமிடத்தில் சுபக்கிரகங்களிருக்கில் தனவானும் சவுந்தரியமான முகத்தையுடையவனுமாம் எ-று. ௰௬

வாழ்ந்தெழுங்குடும்பனோடே குளிகனும்வாழவன்றிக
கூர்ந்திடுந்தனத்தானீச னொன்னிலேகோபியாகுஞ்
சாந்தணிதனத்தா பொன்னனுகவுமதனிற்றங்கு
மேந்தருனுச்சமாகச் சாத்திரமலையுங்கற்பான்

(இ-ள்.) இரண்டாமிடத்திற்குடையவனுடனே குளிகன் நிற்கினும் இரண்டாமிடத்திற்குடையன் நீசமாகினும் வெகுண்டவாகியாம் இரண்டாமிடத்திற்குடையவனுகல் குருவாதல்நின்றஇராசியாதிபதி உச்சமல்லது உச்சாம்சம்பெறில் சகலசாஸ்திரபண்டிதனும் எ-று. ௰௭

கற்பதாம்வாக்குநாதன் சுபன்வர்க்கோத்தமந்தானேறப்
பற்பனதனத்தான்பொன்னன் பாராவதாம்சமேறப்
புற்பதம்நிந்தபால னுச்சமாய்ப்புதனுங்கூடிப்
பற்பமாயயிர வதப பதத்தனிற்றனத்தனுமே.

தல்கூடிநிற்கினும் சோதிசாஸ்திரம் பாடவல்லவன் எ-று

வகுத்திடும்வாக்குநாதன் பருதிசேயாகுமாகி
மகுத்துவம்புகர்பொன்பார்க்க வழங்குசேர்திடநூல்வல்லான்
மிகுத்துடன்றனவான்வெள்ளி பொன்னேனக்கதிர்சேர்ப்பாச
பகுத்திருந்தனவானுச்ச னுகவேவேதம்பண்ணும்.

(இ-ள்.) இரண்டாமிடத்திற்குடையவன் சூரியனாகவாதல் அங்காரகனாகவாதல் இருக்கஇவர்களைக் குருசுக்கிரன்பார்க்கில் ஜோதிஷ சாஸ்திரம்பாடவல்லவன் இரண்டாமிடத்திற் குடையவன் குருசுக்கிரனாய்சூரியாங்காரகர்களாலே பார்க்கப்பெற்றுஉச்சராசியிலே நிற்கில்வேதஞ்செய்யவல்லவன் எ-று

பண்ணியதனத்தான்பொன்ன னுகவும்பலமேற
மின்னியகதிரோன்வெள்ளி பார்க்கவேவேதந்தேர்வன்
மன்னியதனத்திற்பானு வதிபதிட்வாக்குநாதன்
பொன்னுடசட்டவட்டம் வியம்புகப்புகல்வன்மாதோ,

(இ-ள்,) இரண்டாமிடத்திற்குடையவன் குருவாய் சுபவர்க்கமேற இவர்களைச் சூரியசுக்கிரன்பார்க்கில் வேதம்பாடவல்லவன் இரண்டாமிடத்திற் சூரியனிருக்கமேற்படி இரண்டாமிடத்திற் குடையவன்குருவுடனேகூடி சாஷ்டாஷ்டம்வியத்திலிருக்க சகலசாஸ்திரவல்லவனாம்

மாதகலக்கினதி வந்தவங்கிசந்த னுச்ச
நாதநாதன்வீடாகில் நவிலிரண்டாமிடத்த
னேதமில்நாதனைபத தாங்கின்புச்சவீடாங்
கோதிலாவங்கிசமேயேறக் குபேரன்பேற்றனுமுண்டாமே,

(இ-ள்,) இலக்கினாதிபதியேறின அங்கிசாதிபதி உச்சமொட்டேத்திராமங்கிசமேற குபேரன்போல்வெகுதனதுபதியாயிருப்பான் எ-று.

தனதன லக்கினதி ராசிநதிடு ராசியானு
மினமெனக்கர்மவீட்டா னிவர்கமேவிலக்கநாலா
மனியுடைவேநதைப்பொன்னேமகிழ்வுடன்பார்க்கின்முன்னம்
வினவிலாவாலிபத்திற் றனமெனவிளம்பலாமே,

(இ-ள்.) கர்மாதிபன் தனாதிபதியுடனே லக்கினாதிபதியிருந்தஇராசியாதிபதிபெலக்க சு-மி - முடையவனே வியாழத்தால் பார்க்கப்பட்டால் வாலீபந்தொடுத்து தனலாபமுண்டாம் எ-று ௨௬

விளமபிதன்றனலாபன் லக்கினனிவர்களன்னைத்
துளக்கிபசுகத்தான்பார்க்கச் சொச்சோச்சத்துலங்கியேறும்

வளர்துவாழுவிசேடவங்கி சம்வரினுவந்துவாக்கா
ளைந்திகழுச்சவங்கிச முறததனமுண்டாமென்றே.

(இ-ள்.) இலக்கினாதிபதியும் லாபாதிபதியும் சுகவானுலேபார்க்கப்பட்ட உச்சசொட்சேத்திரங்க் கிருக்கவிசேஷாங்கிசமேற இரண்டாமிடமுடையவன் உச்சாங்கிசமடுக்க வாலிபந்தொடுத்துத் தனலாபமுண்டாம் எ-று, ௨௭

நன்றெனுந்தனத்தான்லாபத் துடனணியுதிக்கத்தோன்று
மன்றலசோலக்கினேசன் கூர்க்கிலால்லாபநாவ
ஞென்றியலக்கினத்தி லுதித்திட முன்னம்வைத்து
நின்றதோர்கிட்சேப வாயநிகிதவந்துகூத்தானே

(இ-ள்.) இலக்கேனசன் தனத்திலிருக்கத் தனேசன் லாபத்திலிருக்க லாபேசன்லக்கினத்திலிருக்க கிட்சேபயோகமுண்டு எ-று. ௨௮

கூடியகிரகமெல்லாம் லக்கினநாதனைக்கூடி
யாடவிற்குருவும்வைகேசி யங்கிசமறிலாபந்
தேடருந்தனத்தானுச்ச ருகவுஞ்செழிப்பதாம
நாடுதற்கரிதாய்விர்ய தனங்களொன்றுமுண்டாம்

(இ-ள்.) சகலகிரகங்களும் இலக்கினாதிபதியுடனே கூட குருவர்கவைடுசியேங்கிசமறத்தனலாபமுண்டு தனாதிபதி பரம்புச்சனாகியிருக்க அவனுக்குவிரியமான தனங்கள்வந்துசேரும் எ-று, ௨௯

நாளுமேசுபக்கோன் ரணமாப்காலிலானத்தைநாட
வாழ்வுமோமத்தியாகும் வாக்கினுன்புதனோடாகித்
தாழ்விலாலக்கினாதி பெலமுதலாபந்தானே
மீளிபோல்விழாழும்பார்க்கும் விருத்தந்திற்றனமுண்டாமே

(இ-ள்.) இரண்டாமிடத்தில் சுபனிருக்க திரவியம்வயசு மத்தியில் வரும்இரண்டாமிட முடையவனோடே புதன்கூடலக்கினாதி பலபெலமாகவிருக்க லாபாதிபதியைக் குருபார்க்க விருத்தவயசிலே தனமுண்டாம் எ-று, ௩௰

உண்டிடும்பிராதர்நாதன் லெக்கினன்றனேசனென்றுய்க்
கண்டிடும்பெலனுற்றுங் கிரகமேகண்ணுற்பார்க்க
ரண்டிடமுடையனாலே பார்த்திடிற்சகோதராளாற்
கொண்டிடுந்தனங்களென்றுகூறினர் நூல்வல்லோரே.

(இ-ள்,) மூன்றாமிடமுடையவன் தனாதிபன் லக்கினாதிபன் பெலமாயிருக்க புருஷகிரகங்களாலேயும் இரண்டாமிட முடையவனாலேயும் பார்க்கப்பட்ட சகோதராளால் திரவியம்வந்துசேரும் எ-று. ௩௧

வல்லவன்பிராதுர்நாதன் றனத்திலாய்க்கேந்திரத்தி
னல்லபூமகனைப்பனைபார்க்க லக்கினேசன்பார்க்கமுன்போ
லில்லையேனைக்கினுதி தனத்தவன்கேந்திரத்திற்
சொல்லியேமாறிலாபன் பார்க்கவுந்தனமுண்டாமே

(இ-ள்) மூன்றாமிடமுடையவன் தனத்திலிருக்கச் செவ்வாய்கேந்திரத்திலிருக்க இவர்களையெல்லாம் லக்கினதிபதிபார்க்கச் சகோதர்களால் திரவியம்வந்துசேரும் லக்கினதிபன் தனதிபதியுடன் அன்னியபுண்ணியகேந்திரங்களிலிருந்துபார்க்க லாபாதிபதியாலே தனதிபதியைப்பார்க்கச் சுபக்கிரகங்களும் பார்க்க நானாவிதத்திரவியமும் வரும்-எ-று. ௩௨

சுகமெனுங்குருவும் புத்திரேசனுங்கேந்திரத்தி
லுகமெனுங்கோணத்தாத லுதிக்கவுமிலக்கினதி
யகமெனவுச்சனுய்வை தேசியங்கிசமுவப்ப
மகவினுற்றனமுண்டாகி வருமெனவுரைக்கலாமே

(இ-ள்) புத்திரேசனும் வியாழமும் கேந்திரத்திரிகோணத்திலிருக்க இலக்கினதிபதி வைசேசிகாங்கிசம்பெறப் புத்திரராளாலே தனமுண்டாம்-எ-று.

உரைத்தசத்துருவான்ரண்டா மிடனுடன்கூடப்பொன்னுந்
துரைக்கதுபெலமாய்நோக்கிற் சத்ருவாற்றனமுண்டாகு
மிரைத்தெழுபேழார்வீட்டா னுடன்றனநாதன்கூடில்
விரைத்தபொன்பார்க்கலக்னத் திரத்தினன்மிகவுண்டாமே

(இ-ள்) சஷ்டேசனுடன் தனதிபன்கூடி பெலாட்டியனாகஇருக்க வியாழம் பெலமாக இருக்கச் சத்துருவினால் தனலாபம் களத்திராதிபதியை வியாழம்பார்க்க திரிமூலதனமுண்டாம்-எ-று. ௩௪

மிகமெனுமிரவிநன்றாய் பெலத்துடன்வியாழம்பார்க்க
துகமெனுங்கர்மநாதன் பெலன்சொலப்பிதாவாலாபங்
ககமதிலாபத்தானுங் குருவுமேமாறிப்பார்க்கச்
செகமதிற்பெண்ணேபார்க்கத் தெய்வமாற்றனமேசேரும்

(இ-ள்) பிதுருகாரகன் பெலக்கக் குருவாலேபார்க்கப்பட்ட கர்மேசன் பெலமாகயிருக்க பிதாவினிட தனம்வரும் லாபேசனும் வியாழமும் மன்னியோன்னியமாய்ப்பார்க்க அல்லது வியாழமாகிலும் பார்க்க தேவதைகளால் தனம்வந்துசேரும் எ-று. ௩௫

சேர்ந்தெழுலக்கினதி பெலத்திலேசெயமாய்ப்பாவி
போந்ததைப்பார்க்கரண்டான் சட்டாட்டபோகம்பானு

வீர்ந்திடுமீனனுகி யில்லாதுவியனிரண்டாய்ச்
சார்ந்திடத்தனத்தினீசன் சட்டமாதெண்டமாமே

(இ-ள்) இலக்கினதிபன் ஈனபெலமாகப் பாவிகளாற் பார்க்கப்பட்ட சஷ்டாஷ்டமத்தில் தானுதிபதியும்ஆதித்தனும்போகஅவர்கள்நீசனுகத் சனஈனம் வெயேசன் தனராசியிலிருக்க லாபாதிபதி அஷ்டமத்திற் போகத் தனத்தில்நீசனிருக்க இராசதெண்டத்திலே தனசேதம்வரும்-எ-று. ௩௬

தெண்டியாத்தனேசனுச ராசிதானீசனுகத்
தண்டியேகுருசட்டாட்ட மாசராற்றனங்கனுசம்
ரண்டெனவியயன்கூட லக்கினனுறெட்டாமி
ரண்டிலக்கினனுநாசம் வியன்பார்க்கக்கோபச்சேதம்

(இ-ள்) தனேசன்நாசராசியிற்போக அல்லதுநீசனுகப்போக வியாழமுஞ் சஷ்டாஷ்டமவியத்திற்போகஇராஜதெண்டத்தினுல் தனச்சேதம்வியாதிபதியுடனேபார்க்க இலக்கினேசன் நாசராசியினுலே பாவியாகயிருக்கஇராசகோபத்தினுல் தனச்சேதம்-எ-று. ௩௭

சேதமாக்கர்மலாபன் னேமகண்டாங்சமேறச்
சார்தனநாதனுந்தா னவனுமிற்சிரச்சேதமாம்
போதவேதனத்தான்கர்ம நாசமாய்ப்போகலோகத்
தூதரியாமற்பாவி யவரங்சந்தனமேநாசம்

(இ-ள்) கர்மேசன் லாபாதிபதி யமகண்டாங்கிசம்ஏறினும் நாசராசியிலிருக்கினும் சிரச்சேதம்வரும் தனுதிபதியுமப்படியிருக்க லோகஅபவாதத்தினுல்தனச்சேதம்-எ-று. ௩௮

தனதெனுக்குரூரமான அங்கிசஞ்சார்ந்துபாவா
ளினமெனக்கூடலாப னிவ்வணமாகிச்சேதம்
வினவியதனத்தானின்ற ராசியான்குளிகன்கூடி
யனுதினமாறெட்டாகி லவர்கட்குந்தனமேநாசம்

(இ-ள்) தனேசன் குரூர அங்கிசம்ஏறிப் பாவிகளுடனேயிருக்க லாபாதிபதியும்அப்படியிருக்கத் தனஈனனதிபதி எந்தராசியிலிருந்தானேஅந்தராசியாதிபதி சஷ்டாஷ்டமவியத்திற்போகக் குளிகனுடனேகூடத் தனஈனன்-எ-று. ௩௯

அவாகளிற்றனத்தான்றன்னைப் புகர்குருவாலேபார்த்துக்
குவடெனுக்குரூரசட்டி யங்கிசங்குறுகிவாழ
நவமெனுமிலக்கினதி சட்டாட்டவியங்களுடைப்
பவனெனுத்தனத்தைவைத்துப் பார்த்துப்பினிழுந்துபோவான்

(இ-ள்) தனாதிபதியைக் குருசுக்கிரன் பார்க்கப்பட்டு குரூரசஷ்டியங்கிசமேற லாபாதிபதியும் லக்கினாதிபதியும் சஷ்டாஷ்டமவியங்களிற்போக வெகுநாள்தலை மிருந்து இழந்துபோவான்-எ-று. ௭௰

இளந்தையா ன்றனத்தான் வைகே சியங்கியமேறப்பொன்னன்
வளர்ந்துயர்வீட்டின்மூலத் திரிகோணத்தில்வருமேயாகி
லுளர்ந்திகழ்தனமேதேடி யிருக்குமாப்போலேநாளி
லிழந்துபின்றேடித்தேடி யிருப்பதுதிண்ணமாமே

(இ-ள்) தனவான் வைகேசியங்கிசமேறக் குருசொட்சேத்திர மூலத்திரிகோணத்திலிருக்க லாபம்வந்துநாசமாகப்போம்-எ-று. ௭௧

இருப்பதிலக்கினத்தான் றனத்தினிலாபமாறுன்
விருப்புடன்கூடவேழிற் சுக்கிரன்மின்னார்சேத
மருக்கமழ்புகரோனேழில் வியாழந்தான்பாராவிட்டாற்
றிருக்களாலாயிரம்பொன் சிந்தைப்வேய்த்தோளணங்கே

(இ-ள்) இலக்கினேசன்தனத்திலிருக்க லாபேசன்ஆறாமிடமுடையவனுடனேகூட ஏழிற்சுக்கிரனிருக்க ஸ்திரீமூலத்தின் ஆயிரம்பொன் விரயமாம்.

வேயத்திற்புகரேவாழ வியாழமுந்தனத்திலாகிச்
சேயுற்றசிகரமாதி சேர்ந்திடத்திரியலாப
மாயுற்றலக்கினாதி யுடன்பொன்வைசேகிமேவச்
சேயப்பொன்கேந்திரகோணந் திரிபினாலாபநல்லாய்

(இ-ள்)வியத்திற்சுக்கிரனிருக்க தனத்தில்வியாழம்சிறக்கச் சந்திரன்கர்மாதிபடனேகூடியிருக்க ஸ்திரீகளினாலே அர்ச்சிப்பன் குருலக்கினாதிபதியுடனேகூடித் தனேசன்வைகேசியங்கிசமேறக் கேந்திரத்திரிகோணத்தில் வியாழமிருக்க முன்சொன்னபலன்-எ-று. ௭௨

நல்லதோர்தனத்தான்கேசி யங்கிசமதுவேகாட
வல்லவன்பாக்கியாதி ரளத்திரத்தானமாகப்
புல்லியனுலாமவீட்டிற் சுக்கிரனிற்கப்பாவ
ரெல்லையில்லாதிரண்டு லக்ஷம்பொன்னுட்சிப்பானே

(இ-ள்) தனாதிபதி வைகேசியங்கிசமேறப் பாக்கியாதிபதிஏழினிலிருக்க நாலாமிடத்தில்சுபனிருக்கஇரண்டுலக்ஷம்பொன் அர்ச்சிப்பான்-எ-று-௭௩

ஆட்சியாம்புகரும்வேயன் றனத்திலேவியாழமாகிக்
காட்சியாம்லக்கினேசன் வைசேகியங்சங்காணத்
தாட்சியாம்லக்கினாதி பதியுடனுகிலென்று
மாட்சிமையாகநாளு விதத்தினிலாபம்வாங்கும்

(இ-ள்) வியத்திற்சுக்கிரனிருக்க தனத்தில் வியாழமிருக்க லக்கினேசன் வைசேசியங்கிசமேற அல்லது லக்கினாதிபதியுடனேகூட நானாவிதத்திரவியம வந்துசேரும்-எ-று. ௩௫

வாய்த்தெழுலாபநாதன் பாக்கியம்வாழுவன்றிப்
பாக்கியம்லாபத்தானைப் பார்த்தவர்க்கோத்தமான
தேய்த்தலக்கிசமேயேறச் சுகரு ஞ்ஞாயச்சதகம்பத்தாய்க்
காய்த்தபொனூர்தியாகிக் கனமுடன்வாழ்குவானே

(இ-ள்) லாபேசன் பாக்கியத்திலிருக்க அல்லது பாக்கியாதிபதி லாபேசனைப்பார்க்க குரு வர்க்கோத்தமாங்கிசமேறப் பதினாயிரம்பொன்னாட்சிப்பான்-எ-று ௩௬

கனகனுந்தனத்தான்சட்டாட் டமவியனுடனேகூட
வனுதினந்தனமேயில்லை யிருக்கனுஞ்சனியுங்கூடிப்
புனிதனும்புகருமாறிற் பூமகன்கூடவன்றி
வினவியசனிதானாறின் மேவினும்பிட்சையாவான்

(இ-ள்) இரண்டாமிடமுடையவன் சஷ்டாஷ்டமவியாதிபதியுடனேகூடியிருக்க அவனுக்குத்தனமில்லை சூரியன்சனியுடனேகூடி சுக்கிரன்ஆறுமிடத்திற்செவ்வாயுடனேகூட அல்லது ஆறுமிடத்திற்சனியிருக்கப் பிக்ஷாவிருத்திபண்ணுவன் எ-று. ௩௭

மேவியசனியுஞ்சேயுந் தனத்திலேவிளங்கவிந்து
பாவியாமெட்டிலாகிற் பயித்தியக்காரனாவா
னுவியவட்டமத்திற் சனிராகுநாலிலாகத்
தாவலேயெட்டிற்குரு சட்டியான்மத்தியாமே

(இ-ள்) செவ்வாயுஞ்சனியும்இரண்டாமிடத்திலிருக்கச் சந்திரன்அஷ்டமத்திலிருக்கப் பயித்தியக்காரனாவான் அஷ்டமத்தில் இராகுகேதுவிருக்க நாலாமிடத்திற்சனியிருக்க அல்லதுஎட்டாமிடத்திலிருக்க குருராசஷ்டியங்கிசமேறப் பயித்தியக்காரனாவான்-எ-று. ௩௮

மத்தவாகேசனிசஞ் சட்டாட்டவியங்கள்பாம்பு
மத்தனுஞ்சனியுமிந்து மட்டஞமரணநாயாரு
சித்தமாமலாபமைந்தர் சேரினேசெய்யபாம்பா
லுத்தமமதியுங்கூடத் தாயனுமரணமாமே

(இ-ள்) வாக்குஸ்தானாதிபதி நீசனாகசஷ்டாஷ்டமவியங்களிலே இராகு கேதுவிருக்க ஐந்தாமிடத்திற்சனியுடனேகூடிசந்திரனிருக்க மாதா அனும

ரணம் லாபேசன்சனியுடனேகூட அல்லதுசெவ்வாயுடனேகூட ராகுகே துசந்திரனுடனேகூட மாதாஅனுமரணம்-எ-று. சக

தாயெனுமிலக்கினேசன் றனபதியுடனேசார
வேயெனும்புகருங்கூடக் குருவதைவிரும்பிப்பார்க்க
நாயகன்வேயனோடே நண்ணவேதானும்பொல்லாத்
தீயவன்ரணத்துக்குள்ளாய்ச் செயலுடன்வாழ்குவானே

(இ-ள்) இலக்கினேசன் தனுதிபனுடனேயும் வியாதிபனுடனேயுங்கூட குருபார்க்க வியாதிபனுடனே தனுதிபன் இருக்கரணப்படுவான்-எ-று. கூ

செயல்பொருந்தனததான்பாவி லக்கினவியத்திற்சேரத்
தயவுடனங்கிசத்திற் றனஞ்சனிவீடுதாக்க
வியல்புடனரணமாமரண்டிற் பாவியாய்லக்கினேசன்
மயல்பெருவியமாம்ரண்டா மங்கிசஞ்சனியவ்வண்ணம்

(இ-ள்) தனத்தில் பாவியிருக்க லக்கினேசன் வியக்கத்திலிருக்கத் தனுதிபதி சனியங்கிசமேற இரணப்படுவான் இரண்டில்பாவியாய லக்கினேசன் வியமாய்இரண்டாமிடத்தானங்கிசத்திற் சனிபார்க்கரணப்படுவான்-எ-று

வண்ணம்பாக்கியாதி பதிஞென்றில்வாழுப்பானு
திண்ணமாய்தனயேசேரத் தனத்தவனிசஞ்சேரப்
பண்ணியேபாவராலுந் தனமுறவட்டமத்திற்
கண்ணிலாப்பாவர்கூடில் ரணமுடன்காலம்போமே

(இ-ள்) பாக்கியாதிபதிலாபத்திலிருக்கசூரியன் தனத்திலிருக்கத் தனேசன்நீசராயிருக்க அல்லது பாவாள்தனததில் அஷ்டமத்திலிருக்க ரணமுண்டாம்-எ-று. கூஉ

காலமாந்தனேசசட்டாட் டமவியமேவக்கண்டு
கோலமாங்குருரசட்டி யங்கிசங்கொள்ளலாபன்
வாலமாலக்கினேச னுடன்சட்டிவருமேபாகி
வேலவேரணமுண்டாகி யிருபதுவாக்குத்தானே

(இ-ள்) தனேசன் சஷ்டாஷ்டம வியத்திற்போகக் குருரசஷ்டியங்கிசமேற லாபேசனும்லக்கினேசனும் குருரசஷ்டியங்கிசமேற ரணம்வரும்.

வாக்கினன்றுன்சட்டாட்ட வியமதாய்ராகுவாறி
னிக்கமில்லாமற்கூடிற் றந்தய்போமிவ்விரண்டா

யோக்கவேசெவ்வாய்நாலி லிருக்கவும்பல்லுநோயாந்
தாக்கியபெலத்தைப்பார்த்து தன்னிலேபாய்ந்துபாரே .

(இ-ள்) வாக்குஸ்தானாதிபதி சஷ்டாஷ்டமத்திலிருக்க ராகுவும் ஆறில் கூடியிருக்கபல்விழுந்துபோம் ஆதித்தன்தனத்திலிருக்க செவ்வாய்நாலிலிருக்க பல்நோயுண்டாம்-எ-று. ௫௪

ஆய்ந்துபார்த்தனத்தினாது மட்டமமிருக்கவெய்யோன்
காய்ந்திடுலக்கினாதி யுடன்ரோகத்தானக்காண
வேய்ந்திடுங்கானநோயு மிலக்கினன்றனத்தானான்
வாய்ந்துகூடச்செய்கங்கன் வாக்குறிற்பல்வாலீபத்திற்போமே

(இ-ள்) தனாதிபதிஅஷ்டமத்திலிருக்க ஆதித்தனுடனேகூட லக்கினாதிபதி ஆறுமிடத்திலிருக்க ரணரோகம்வரும். ஆறுமிடமுடையவனுடனே தனாதிபதியும் லக்கினாதிபதியுங்கூடச் செவ்வாயுமசனியும் தனத்திலிருக்க வாலீபத்திற்பல்விழுந்துபோம்-எ-று. ௫௫

வாலீபன்றனத்தானத்தான் மித்துருவங்சம்வாழ்ந்து
சேலமாயுச்சமாக வியாழமுமதியுகன்றாய்ப்
பாலனாய்ப்பெலனாய்நண்ணப் போசனப்பிரிவுண்டாகு
மேலவேவாக்கான்கார னங்கிசநலதேன்முன்போல்

(இ-ள் வாக்குத்தானாதிபதிமித்துருஅங்கிசமேறிப் பரமவுச்சத்திலிருக்க சந்திரனும்வியாழமும் பெலத்திருக்க போசனசௌக்கியமுண்டு வாக்குத்தானாதிபதி நல்லஅங்கிசமேற வாக்குக்காரகன் நல்லஅங்கிசமேற போசன சௌக்கியமுண்டாம்-எ-று. ௫௬

முன்பதாம்புகருமிந்தும் பெல்முறத்தனத்தினாத
னன்பினாலேவிசேட வங்கிசமதனில்வாழப்
பின்பதாமிலக்கினேச னுடன்சனிபெலமாய்க்கூடி
லின்பமாம்போசிப்புக்கிட்டா திருப்பதுதிண்ணமாமே

(இ-ள்)சுக்கிரன்சந்திரன்பெலத்திருக்க தானாதிபதி விசேஷாங்கிசமேற லக்கினேசனுடனேசனிகூடச் சங்கடபோஜனம்-எ-று. ௫௭

இருந்திடுந்தனத்தானுச்ச வைகேசிகாங்சமேறப்
புரிந்தெழுப்புந்தியோடே கூடவும்புத்திரேச

னருந்தியேயேறுமந்த வங்கிசனுதன்வீடாய்ப்
பொருந்தவேயிருக்கவெள்ளி பாத்திரமதிற்பொசிப்பன்

(இ-ள்) இரண்டாமிடமுடையவன் உச்சமாக வைசேஷிகாம்சமேறப் புதனுடனேகூடப் புத்திரேசன்ஏறின அம்சத்தில் அம்சாதிபதிபெலத்திருக்க வெள்ளிப்பாத்திரத்திற்பொசிப்பன்-எ-று. ௫௮

பொசிப்பெனுந்தனத்தான்பாவ சகிதனாய்ப்பொருந்துவீடா
யொசித்தவாவறட்டுவீய முத்திடிலோடுபட்டை
விசித்திரன்புத்திரநாச ராசியைவிரும்பப்பாவ
ரசிதத்தைப்பார்க்கலோடு பட்டையாமறையலாமே

(இ-ள்) வாக்குஸ்தானதிபன் பாவக்கிரகசகிதனாக அவனிருந்தராசியான் அஷ்டமவியங்களிற்போக ஓடுபட்டைகளிற் பொசிப்பான்-எ-று. ௫௯

அறைந்தெழுமைந்தனதி யரசெனுஞ்சுபனேயாகி
நிறைந்துதானிருந்தவீட்டான் சுபனெனச்சுபனேபார்க்கச்
சிறைந்துவாழ்நல்லபுத்தி புத்திரேசனுஞ்சிறக்க
வறந்தருங்குருவுஞ்சுங்கன் பருமமேலமரர்போக்கியம்

(இ-ள்) புத்திரஸ்தானதிபதி சுபனாகச் சுபக்கிரகமிருந்த அவனிருந்தராசியாதிபதியுஞ்சுபனாகச் சுபக்கிரகம்பார்க்க நல்லபுத்தியுடையவன் புத்திரனதன் பெலவானாயிருக்க விசேஷாம்சமேறக் குருசுக்கிராளாற் பார்க்கப்பட்ட சொட்சேத்திரத்திலிருக்கத் தெய்வபோக்கியபோசனமுண்டு-எ-று.

அமரர்தன்குருவும்பொங்கி தனபதிகூடவன்றி
யிமனனுந்தனத்தைப் பார்க்க கேசியங்கிசவிரும்பி
நமதெனமுருத்துவங்க சத்தாறுமேறநன்றாய்த்
தமதெனவமரருணு யுண்ணலாந்தாழ்ச்சியில்லை

(இ-ள்) தனதிபதியுடனே குருபுதன்கூட அல்லதுபார்க்க வைசேசியங்கிசமிருத்துவங்கிசமேற தேவபோக்கிய போசன முண்டாம்-எ-று. ௬௧

உண்டருந்தனத்தான்பொன்னன் புகரெனப்புதனும்பார்க்கக்
காண்கெனக்கூடக்கேசி யங்கிசங்கமழ்பொசிப்பாஞ்
கேண்பெருந்தனத்தான்பாவ நீசனய்க்குரூரசட்டி
பூண்பலபொசிப்புத்தேடிக் கருத்தழிந்துலைந்துபோவான்

(இ-ள்) வாக்குத்தானதிபதி குருசுக்கிரனாக அவனைப்புதன்பார்க்கக்கூட வைசேசியங்கிசமேற தெய்வபோசனம் தானதிபதி சொட்சமித்துரு உச்சமல்லதேல் பாவநீசனய்க் குரூரசட்டியங்கிசமாயிருக்க அல்லது பார்க்க அன்னந்தேடிப்பொசிப்பான்-எ-று. ௬௨

கருத்தெனுந்தனத்தானத்திற் காரியாய்த்தனத்தாகீசம்
பொருத்தவுமன்றிக்கூட பிராத்தத்திற்பொசிப்பதாவா
னுருத்தெழுந்தனத்தாள்காரி சேய்குளிகன்னோடாக
வரித்தனைப்பார்வையாகி லுஞ்சிராத்தமன்னும்

(இ-ள்) தனத்திற்சனியிருக்க அர்த்தாதிபதி நீசனாக அல்லதுசனியு டனேகூட சிரார்த்தங்களிற் கூடித்தின்பன் புத்திரனுதன் சனி செவ்வாய் குளிகனுடனேகூட அல்லது அவர்கள்பார்க்கச் சிரார்த்தம்வாங்கிப் பொசிப்பான்-எ-று. ௬௩

மன்னியதனத்தான்பாவ சகிதனுய்லக்கினத்தி
லன்னியுந்தனத்திலாறி லாதித்தன்சேயயாகப்
பன்னியசேய்தான்பார்க்கப் பெரியோர்கடமைப்பல்காலும்
பொன்னிகர்விரதனுகிப் பூசிதம்பண்ணுவானே

(இ-ள்)தனத்தான் பாவியுடனேகூடியிருக்க லக்கினேசன் சஷ்டமத்தானத்திலே ஆதித்தனிருந்து செவ்வாயாலே பார்க்கப்பட்டால் பெரியோர்களைப்பூசிப்பன்-எ-று. ௬௪

பண்ணியசெவ்வாய்சத்துரு தானனுயுதத்திற்பற்றத்
தண்ணியில்வியத்திலாதல் சனிகூடத்துறுவாக்காகு
மெண்ணியசனியிரண்டி னுலெனும்பாவரேறிற்
றிண்ணமாந்திடனேபேசித் திரிவதுவாக்குத்தானே

(இ-ள்)இலக்கினம்வியத்திற்செவ்வாயிருக்க சத்துரு தானுதிபதியாகயிருக்கச் சனியுங் கூடியிருக்கத் துர்வாக்குபேசுவான் தனத்திற் சனியிருக்க கர்மகாலிற்பாவிகளிருக்கப் படுதூஷணபுத்தியுடையவன்-எ-று. ௬௫

வாக்கிலோர்காயமாந்தி மனதுடன்பார்க்குமாகிற்
ருக்கியசர்ப்பபீதி தனத்தினிற்பாவியாக
நீக்கமில்லாமற்பாவி பார்க்கருராங்சமேவத்
தேக்கியதனத்தான்பாவி கூடவேசர்ப்பந்தீண்டும்

(இ-ள்) தனத்திலேராகுவிருக்கக் குளிகனுலே பார்க்கப்பட்டால் பாம்பினுற்பீதியுண்டு தனத்திறபாவியிருக்கப் பாவிபார்க்கக் குருராங்சமேற இரண்டாமிட முடையவன் பாவியுடனேகூட சர்ப்பந்தீண்டும் இப்படி பெலாபெலமறிந்து ஆராய்ந்து சொல்லுவது-எ-று. ௬௬

இரண்டாம்பாவ-முற்றிற்று.

———*———



உ

கடவுள் துணை.

———(※)———

# மூன்றாம்பாவம்.

கூடியதனத்தின்பாவங் கூறினோமூன்றாம்பாவா
நாடியசககசம்பிராதுர்ப் பராக்கிரமங்களவுரோகம்
வீடியகழுத்துமேலும் வித்தைதட்சணம்பட்சிப்புக்
தேடியவேங்கடேச தேவனுமருள்செய்தானே

இ-ள்- மூன்றாமிடங் கொண்டு சகசம் சகோதரம் பராக்கிரமம்கழுத்துகளவுரோகம் வித்தை தட்சணம் பட்சிப்பு இவைகளைச் சொல்லுவோம்-எ-று. (௧)

செய்தியாமூன்றாம்பாவத் தேவனுஞ்சேயுங்கூடி
வெய்யவன்பாபாள்கூட வல்லதுவிரும்பிப்பார்க்க
வெப்தியாய்ச்சட்டவட்ட வியங்களிலிருக்குமாகி
ஊனபவேசகோதரங்க ளைசமாங்கலைவல்லோரே

இ-ள்- மூன்றாமிடமுடையவனும் செவ்வாயும் பாவிகளுடனேகூடிப்பாவிகள் பார்த்து சாஷ்டாஷ்டமவியங்களிலிருக்கச் சகோதராள் நாசம். (௨)

வல்லவர்பாவான்மூன்றில் வதியவும்பார்க்கநாச
நல்லதேமூன்றானீச னங்கிசநாசமாகிற்
புல்லவன்பாவரோடு சகிதனைப்பொருந்துமாகி
லில்லையாஞ்சகோதரங்க ளென்றுமாமுனிவன்கூறும்

இ-ள்- மூன்றில்பாவியிருக்க அல்லது பாவிகள்பார்க்க சகோதரமில்லை சகோதரநீசனாக நீசாங்கிசமேற பாவசமானிதனாக இருக்கச் சகோதரமில்லை-எ-று. (௩)

கூறியமூன்றாம்வீட்டான் குறுகிமங்கிசத்துநாத
னீறிலேநீசரங்க மேறவேபிராதாவில்லை
தேறியேசகோதரத்திற் பாவியேசேரவன்றி
மீறுகாரகனைக்கூடிற் சோதரம்விலக்கதாமே

இ-ள்- சகோதரத்தானதிபதி வறின அங்கிசாதிபதி நீசாங்கிசமேற

ச்சகோதரநாசம் மூன்றுமிடமுடையவன் பாவியாகயிருக்க காரகனு மப்படியேயிருங்கச் சகோதரமில்லை-எ-று. (௫)

விலக்கனும்பிராதுர்நாத் னங்கிசமெந்தவீட்டா
பிலத்திடநாசராசி யாயிடிப்பிராதாவில்லை
யிலக்கினமூன்றும்வீட்டா னெடுத்தவங்கிசத்தானத்தான்
றலத்தினிற்சட்டவட்டம் வியமெனிற்பிராதாநாசம்

இ-ள்- பிராதுருஸ்தானபதி பேறின அங்கிசாபதியிருந்த வீட்டிற் குடையவன் சஷ்டாஷ்டமவியங்களிலிருக்கச்சகோதரநாசமாம்-எ-று

நாசமாஞ்சகோதரத்தான் குருசட்டயங்சமேறப்
பாசமாங்காரகன்றனது வெனிற்றனியனுகு
மாகிலாமூன்றும்வீட்டான் பர்வதாங்கிசத்தின்மன்னத்
தாசனுப்ச்சுபரேபார்க்கச் சகோதரமிகவுண்டாமே

இ-ள்- மூன்றுமிடமுடையவன் குருசஷ்டியங்கிச மேறகாரகனு மப்படியே யேற அவன் ஒருத்தனுக பிறப்பன் சகோதரத்தானுதிப திபெல ஈனமில்லாமல் பாராவ தாங்கிசமேற சுபனுடனே கூடியிரு க்க சுபான்பார்க்கச் சகோதரலாபமுண்டாம்-எ-று. (௬)

உண்டெனுஞ்சகோதரத்தை நாதன்காரகனைமேலும்
விண்டெனச்சுபாளேபார்க்கில் சகோதரமிகவுமுண்டு
கொண்டலாமூன்றும்வீட்டான் கோணகேந்திரமேயாக
வுண்டெனவுஞ்சமாகச் சகோதரமிகவுண்டாமே

இ-ள்- சகோதரகாரகன் சகோதரத்தானதிபதியை சுபாள் பார்க்கப் பெலவானுயிருக்கச் சகோதர லாபமுண்டு மூன்றுமிட முடையவன் கேந்திரதிரி கோணத்திலிருக்க உச்சஸ்வட்சேத்திரனுகச் சகோதரவ ர்த்தனையுண்டாம்-எ-று. (௭)

மிகவெனும்பிராதுர்நாதன் சேயெனும்பீடுமாகி
னகைவிரிசுபரேபார்க்கிற் பராக்ரமனுகவாழ்வ
னுகமெனுமூன்றும்வீட்டா னுச்சனுய்ப்பிலவானுகித்
திகழுங்கேந்திரநாதன்று னுண்டெனிற்றயின்யனுமே

இ-ன்- மூன்றுமிடமுடையவன் செவ்வாய்க்கு ஸ்வட்சேத்திரனுக அந்தராசிபெலவானுக விருந்தால் பராக்ரமசலியாயிருப்பான் மூன்

றும் மிடமுடையவன் உச்சனுகவிருக்க கேந்திரத்திரி கோணங்களி லேசுபக்கிரகமாயிருக்க வைகேசியாங்கிசம் ஏறநைதரியவானுயிருப்ப ன்-எ-று. (௮)

தயின்வத்தானென்னநல்லோர் சகிதனும்வைகேசித்தன்
புயலெனத்திரனுவன் பொருவிலாமூம்றும்வீட்டோன்
றயவுடனுச்சனுகச் சகோதரஞ்சாமேபாகிற்
பயன்மின்றித்திரனுவன் பராக்கிரமசாலியாமே

இ-ள்- மூன்றுமிடமுடையவன் சுபக்கிரகத்துடனே கூடிவைகே சியாங்கிசமேறநிரனுக யிருப்பன் மூன்றுமிட முடையவன் உச்ச னுக மூன்றுமிடஞ் சரராசியாகவிருக்க அவன் பராக்கிரமசாலியாவா ன்-எ-று, (௯)

பராக்கிரமத்தானத்தானும் பன்னிரண்டாகவந்த
திர்க்கமாங்காரகன்று சொட்சேத்திரவுச்சனுகி
லேர்க்கவேசன்வந்தாலும் மெதிர்ப்பமூன்றுமிடத்தா
ஞர்க்கவேகாரகன்பா ராவதமாகிற்றிரன்

இ-ள்- மூன்றுமிடமுடையவன் பனிரண்டிலிருக்கக் காரகன்பெல வானுக அவன்ஸ்வட்சேத்திரவுச்சனுக முதற்சனம்வந்து மறுபடியும் தயிரியம்வரும் காரகன் பாராவதாங்கிசமேறத் திரனுகியுத்தம் பண் ணுவான்-எ-று, (௰)

தீரனும்தராதுர்நாத னுதித்தனுடசேர
வாரலுஞ்சகியுங்கூடிங் சனிபார்க்கவலனுந்திரன்
கோரமாமூன்றுவீட்டான் குருவுடன்கூடவேழாம்
பாரவான்சேயாற்சண்டை பண்ணவேமூட்டுவானே

இ-ள்- மூன்றுமிடமுடையவன் ஆதித்தனுடனே கூடச்சந்திரனு டனே செவ்வாய்கூட சனியாலே பார்க்கப்பட்ட யுத்தங்களிலேசாமா ர்த்தியனுக இருப்பான்மூன்றுமிடமுடையவன்குருவுடனேயும் ஏழா மிடமுடையவன் செவ்வாயுடனேயுங்கூட என்னேரமுங்கலக மூட் டுவான்-எ-று. (௰௧)

முட்டியமூன்றும்வீட்டில் ராகுவாய்ன்றிமூன்று
ஞட்டியவரவுங்கூட வன்றியும்பிராதுர்நாத
னீட்டியகோணகேந்திரன் சனியெனும்மவனேபார்க்க
வாட்டியகளரோகந்தான் வந்திடுந்திண்ணமாமே

இ-ள்- மூன்றமிடமுடையவனுடனே ராகுகூட அல்லது ராகுமுன் றமிடத்திலிருக்க மூன்றமிட முடையவன் பிரதிசித்தமாய் கேர்தி ரத்திருகோணத்திலிருக்க அவனைச்சனியாலே பார்க்கப்பட்டால் கள ரோகம்வரும்-எ-று. (மஉ)

களமெனும்மூன்றும்வீட்டி நீசரோதங்கநாலா
மளவிடைசட்டவட வியங்களாப்பாவிபார்க்கச்
ளம்வதருங்களமாம்ரோகங் குளிகன்றன்முன்றிற்றங்க
வுளதெனும்ரோகத்தான்மூன் றவனுடன்களரோகம்மே

இ-ள்- மூன்றமிடத்தில் நீசக்கிரகமிருக்க நாலாமிடத்திற்குடைய வன்சாஷ்டாஷ்டமவியங்களிலிருக்கப் பாவிகள்பார்க்கக் களரோகம்வ ரும் மூன்றமிடத்திற் குளிகனிருக்க மூன்றமிடமுடையவன் ஆறா மிடமுடையவனுடனே கூடராகு குளிகன் பார்க்ககள ரோகம்வரும்.

உடன்பொருபுகருமிந்து பிலமுறச்சுபக்கோளோடாய்த்
திடன்படச்சுபாகள்பார்க்கப்பொன்னின்பாத்திரஞ்சேர்மூன்றி
றடந்திங்கள்புந்தியாகிச்சவுமியாள்பார்க்கநன்ற [ம்
மிடம்பெறுசாரதன்றா னிவ்வணங்கடுக்கனுண்டாம்

இ-ள்- சுக்கிரனும் சந்திரனும் பெலவானாக சுபாள்கூடப் பார்க்க பொன்பாத்திரத்திற் சாப்பிடுவான் மூன்றமிடத்தில் புதனிருக்க சு வுமியாள் பார்க்கக் காரகனுமப்படியே யிருக்கக் கடுக்கன் அணிவான்,

கடுகியபானுத்தானம பாவிகள்பார்க்கமற்ற
வடுதொழிழ்காரகமெல்லா மாரோபங்கள்ரோகம்மாந்
திடமுடன்முன்றில்ராகு சேரவுஞ்சுபர்பாராமற்
கடவுளர்தானத்தானைப் பார்க்கினுங்களரோகந்தான்

இ-ள்- மூன்றமிடத்தில்பாவிகளிருக்க மற்றக்கிரகங்கள் அபரோக த்திலிருக்க விசேஷமாய்க் களரோகமுண்டு மூன்றமிடத்தில்ராகுவி ருக்க சுபர்பாராதிருக்கக் களரோகம்வரும்-எ-று, (மரு)

ரோகமாந்தானத்தானுஞ் சேயுடன்கூடியந்த
தேகனுஞ்சட்டவட்ட வியமுறிற்செவிகேளாதாம்
பாசமாமூன்றும்வீட்டிற் புகர்நிற்[illegible]குருவும்பார்க்கப்
[illegible]இருக்கநீலக் கடுக்கனு[illegible]ரிகுவானே

இ-ள்- செவ்வாயுடனே ஆறாமிடத்துக் குடையவன்கூடி சஷ்டாஷ்டமவியத்திலிருக்க செவிகெட்டுப்போம் மூன்றாமிடமிடத்திற்சுக்கிரனிருக்க வியாழம்பார்க்க அல்லதுஇருக்க நீலக்கல்கடுக்கன்போடுவான்-எ-று. (ய௫)

வனைகழன்மதியுந்தேவ மந்திரிபுகர்மால்கூடி
வனைவருஞ்சேயுங்கூட வச்சிராபரணமாகும்
புனைமதிபொன்மால்சுங்கன் பொருந்திடமூன்றதாகிற்
றினைசரிபுராணசித்தஞ் செவியுறக்கேட்பன்றானே.

இ-ள்- சந்திரனுடனேயும் செவ்வாயுடனேயும் சவுமியாள்கூட வைரக்கல்பதித்த ஆபரணம்பூணுவான் சந்திரன் வியாழம்புதன் சுக்கிரன் இவர்கள் மூன்றிலிருக்கப்புராணங்கள்கேட்பன்புண்ணியவான்

மூன்றாம்பாவம்.

முற்றிற்று.

———(-)———







கடவுள் துணை

# ஏழாம்பாவம்

---

கேள்வியாம்வேங்கடேச கிரிடிகள்மூன்றும்பாவந்
தாழ்வறவரைத்தேன்பின்னுஞ் சதுர்த்தயங்கிரகமாதா
வாழ்வுறுபாரிவீரம் வத்திரஞ்சயனம்பாச
மாள்விலாங்கங்களேறும் வாகனஞ்சாற்றுவேனே

இ-ள்- நாலாமிடங்கொண்டு வாகனம் கிரகம் மாதருகளத்திரம்வீ
ரம்பாசவர்க்கம் சுபம்புடவை முத்திரகிரிச்சினம் சயனம் நஷ்டம் இ
வைகளைச் சொல்லுவோம்-எ-று. (௧)

சாற்றியபுகரோனேழிற் சாரும்மேற்காமிபுத்தி
கார்த்திடலன்யதாரங் குருவுஞ்சேர்தாரமற்ற
சீற்றமாஞ்சனியுமங்க வீனமேசேருஞ்செவ்வாய்
தோற்றிடில்வெகுபேர்பானுப் பரதாரஞ்செப்பலாமே

இ-ள்- சுக்கிரன் களத்திரத்தானத்திலிருக்க அதிககாமிபதனிருக்கி
ல்அன்னியதார மிச்சிப்பன் குருவிருக்கில் சோரதாரன் சனியிருக்கி
ல் அங்கஈனகங்கமம் குசனிருக்கில் வெகுசத்திவிசையோகம் பானுவி
ருக்கில்பிரதாரம விரும்புவன் (௨)

செப்பியலக்கினாதி குடும்பனுந்தாரத்தானுங்
கொப்பிலாப்பகையேயாகிற் பரத்திரியுகந்துவாழ்வ
னப்படிலக்கினாதி பாவிகளுடனேயாகத்
தப்புமேற்பாவமேழிற் றரித்திடிற்சாதியினம்

இ-ள்- இலக்கினாதிபதியுங் குடும்பாதிபதியும் களத்திரத்தானாதிப
திக்குச்சத்துருவாகியிருக்கப் பாவஸ்திரி கெவுனி லக்கினாதிபன்பாவி
களுடனேகூட பாவிகள்பார்க்க அல்லது ஏழாமிடத்திலிருக்க பரஸ்
திரிகமனன்-எ-று. (௩)

சாதியாம்லக்கினேசன் குடும்பன்சத்துருவான்கூடி
யேதிலாப்பாவிபார்க்க வீனசாதியளைச்சேர்வன்
கோதிலாப்பாம்புமேழலக் குரூரரேபார்க்கிற்கண்ட
மாதரைவிரும்பிப்பொல்லாக் கர்ம்மனாய்வாழுவானே

இ-ள்- இலக்கினாதிபதியும் சத்துருத்தானாதிபதியும் குடும்பாதி ப
தியுங்கூடி யிருக்கப்பாவிகள்பார்க்கானப்பரஸ்திரிகமனன் ராகுகேது
ஏழிலிருக்கப்பாவிகள்பார்க்க விபசாரம்பண்ணுவன்-எ-று. (௪)

கன்மனுமவிந்தையானுங் களத்திரத்தானத்தானும்
பண்ணியவாறிற்பத்திற் பரிந்திடிற்பரவிந்தாகு
நண்ணியவேழாம்விட்டா னூனுறச்செவ்வாய்காண
தன்னிலேவேசியன்னிய ஸ்திரிகளைச்சய்னிப்பானே

இ-ள்- கர்மேசன் வித்திரேசன் களத்திரேசன் இவர்கள் ஆறாமிட முடையவனுடனேகூடி கர்மத்திலிருக்கஅவன்பரபுத்திரன்ஏழாமிட முடையவன் நாலாமிடத்திலிருக்க செவ்வாய்பார்க்கப் பரஸ்திரீகமன ன்-எ-று. (ரு)

தகிமிபுத்திரேசன் களத்திரன்பெலனுய்ச்சேர
வகிலமாமாறன்பார்க்கப் பரவிந்துதிரிவுண்டரவன்
பகரிலமுமடயான்வாக்காங் பாவிகளுடனேகூடச்
செகமுடையவனைபார்க்கிற் சேரலர்தரிக்குங்கெர்ப்பம்

இ-ள்- புத்திரேசனுங் களத்திராதிபதியும் பெலாட்டியராக விருக்க அவன்களத்திரஞ் சோரபத்தாவால் பிள்ளையுண்டாவள் ஏழாமிட முடையவனுங் குடும்பாதிபதியும பாவியுடனேகூடிச்செவ்வாயாலே பார்க்க அவளும்சோரபத்தாவால் பிள்ளையுண்டாவாள்-எ-று. (சு)

தரித்திடுங்களத்திரேசன் பாக்கியன்சட்டவட்டம்
விரித்தெழும்வியங்களாகக் களத்திரன்பெலனில்லானே
லரித்திடிப்புத்திரேசன் பார்த்திடிலவன்றாரத்தாலி
சிரித்திடச்சோரராலே புத்திரர்சிலருண்டாமே

இ-ள்- பாக்கியாதிபதியும் களத்திராதிபதியுஞ் சாஷ்டாஷ்டமவிய ங்களிலிருக்கக் களத்திராதிபதியும் பெலஈனனுக ஐந்தாமிடமுடைய வன்பார்க்க முன்சொன்னபலனுண்டு-எ-று. (எ)

சிலவிடுங்கலைகடேய்ந்த மதிசிலாபாவிகூடி
யலகியவேழாமனைய காமியாஞ்சிடத்தானேழாம்
பலமிதாதேழாம்வீட்டான் பாவனுய்பிருகுபாலன்
பிலமதுகுமறயித்றாராம் பிள்ளையுண்டாகிமாளும்

இ-ள்- சந்திரன் ஜீரணனுய்ப்பெலனில்லாமல் பாவிகளுடனே கூடிஏழிலிருக்க அன்னியகளத்திரகாமி அஞ்சாமிட முடையவன் ஏழிலிருக்க ஏழாமிட முடையவன் பாவிகளுடனே கூடச்சுக்கிரன்பெல வீனனுகக்களத்திரங்கெர்ப்பத்துடனேமரணம்-எ-று. (அ)

பிள்ளையாமதியுநீசம் பெற்றிடசுகர்மனேடே
யுள்ளத்தாங்களத்திராதி சட்கிரட்டவியத்திலோடி

வள்ளருங்குடும்பத்தானஞ் சேயனினமேவும்
கள்ளியருடனேசேர்ந்து காலங்கள்கழிந்துபோமே

இ-ள்- சந்திரன் நீசனுப்போக கர்மாதிபதியுங்களத்திராதிபதியுஞ் சஷ்டாஷ்ட மவியத்திலே போகக் குடும்பதானத்திற் செவ்வாயிருக்க ஜாதியீனகளத்திரன சேர்வான்-எ-று. (கூ)

கழிந்திடுமேழாம் வீட்டான்பாவிகளுடனேகண்டு
மொழிந்திடுங்குருசட்டி யங்கிசமுயற்சியாகி
விழிந்திடுந்திரேகாணத்திட் சனிதானுமேவுமாகி
லழிந்திடுந்தாரந்தானும் வியபட்சணத்தாற்றானே

இ-ள். ஏழாமிடமுடையவன் பாவிகளுடனேகூட குருசஷ்டியங்கிசம ஏறச்சனிதிரேகாணமேற களத்திரம் விஷப்பட்சணத்தினால்மரணம். (ய)

தானெனுங்கர்மநாதன் ராகுவுஞ்சாரேதிவற்
றீனமாஞ்சலராசியாய் சேயுநிற்றியுந்துஞ்சுங்
கானவன்களத்திராதி சட்டியங்கிசமாய்க்கண்ட
மானவன்பாகையெண்ணிற் றாரம்தாழ்வாகச்சொல்லே

இ-ள்- கர்மாதிபதி ராகுவுடனே கூடி ஏழிலிருக்க செவ்வாயாலே பார்க்கப்பட்ட ஏழாமிடஞ்ஜலராசியாயிருக்க ஸ்திரீதண்ணீரிலே விழுந்துசாவாள் ஏழாமிடமுடையவன் சஷடியங்கிசம்ஏற அதிலிருந்த பாகை யெண்ணிஅவ்வளவு களத்திரமென்றறிவது-எ-று. (யக)

சொல்லியகளத்திரேச னுச்சனுய்ச்சோரநீச
மில்லதுபெலாட்டிரனுகி வில்லுவிச்பனனேயாகும்
வல்லவன்லக்கினதி பெலமுறக்களத்திராதி
நல்லனக்குடும்பன்கூட விருதாரநவிலலாமே

இ-ள்- களத்திராதிபதி யுச்சனுக வக்கிரம்நீசமில்லாதிருக்க விற்பனகளத்திரமாக இருக்கும்லக்கினேசன் பெலவானுக இருக்க களத்திரேசனும் குடும்பேசனும் பெலவானுகஇருக்க உபயகளத்திரமுண்டாம்-எ-று.

நவிலருமதியுங்புந்திபுகர்பொன்னுநலமாய்நாடத்
தரவமென்மூன்றுதாரந் தாதிமன்பாக்கியத்தாய்த்
திரவெனிலக்கினேசன் சட்டாட்டநீகஞ்சேர்ந்து
பவமுறினுற்பதாகும் வயசுமேற்பாரிபற்றும்

இ-ள்- சந்திரன் புதன்வியாழம் பெலமாக இருக்க அல்லது சுக்கிரன் பெலமாக இருக்க மூன்றுதாரமென்பது களத்திராதிபதியாகயத்திலிருக்கலக்கினேசன் சஷ்டாஷ்டவியங்களிலிருக்க குடும்பாதிபதியு

மப்படியிருக்க நாற்பதுவயசுக்குமேற் களத்திரமுண்டு-எ-று. ௰௬

பாரிலக்கினத்திற்சுங்கன் பரிந்துசேந்திரகோணத்தாய்
நாரியேகேந்திரத்தி லுச்சனேலாபந்தாரக்
கிரனும்வாகனத்திற் சுகனிர்க்கவாகனேச
னரவேபெலக்கப்பொன்ன னோக்கில்வாகனமாம்யோகம்

இ-ள்- சுகத்திலேசுகனிருக்க கேந்திரகோண உச்சத்திலிருக்க நல்ல லாபதாரமென்பது நாலாமிடத்திற் சுபனிருக்க அல்லது நாலாமிட முடையவன் பெலவானாக வியாழமும் பெலத்திருக்க வாகனயோக மென்பது-எ-று. ௰௭

வாகனலாபமேதுக் கர்மனும்லாபம்பார்க்க
வேகிலக்கினத்தானோக்கி லிவனுமவ்வணமதாகத்
தாகமாய்பிருகுபால னலியாய்த்தானனோடாய்ப்
போகிலக்கினுதியோடி பொன்கூடத்துரகமுண்டாம்

இ-ள்- வாகனத்தானதிபதி லாபத்திலிருக்க கர்மாதிபதி வாகனத் தானத்தை அல்லது தானதிபதியைப்பார்க்க லக்கினாதிபதியும் பார்க் கவாகனயோகம்வரும் சுக்கிரன் நாலாமிடத்திலிருக்க அல்லதுவாகன திபதியுடனேகூட அல்லது வியாழத்துடனே கூடியிருக்க கெஜதுரா கபதாதிவரும்-எ-று. ௰௮

தும்பிசேராசன்சுங்க னுடன்கூடவன்றிப்பார்க்க
வெம்பியபாவிசேர் னோக்கில்வாகனமுண்டாகுந்
தம்பமாம்பாக்கியாதி வாகனனுடனேசார
நம்பிகேந்திரகோணத்தி லிருக்கவாகனமேநல்லும்

இ-ள்- சுக்கிரன் வியாழத்துடனே கூடியிருக்க அல்லது ஒருத்தர்க் கொருத்தர் பார்வையாக வாகனத்தானத்திலாவது லக்கினத் தானத் திலாவது பாவிசேர்பார்த்திருக்கவாகனமுண்டென்பதுபாக்கியாதி பதி வாகனத்தானதிபதியுடனே கூடியிருக்கஅல்லதுபாக்கியாதிபதி கேந்திரத்திலிருக்க அல்லது கோணத்திலிருக்க வாகனயோகமுண்டு.

நலகியபாக்கியாதி வாகனனுடனேகூட
வல்லவன்குருவுமாலாய் வாகன்யோகமுண்டாஞ்
சொல்லியலாபமொன்பான் சுகத்தானனுடனேவாழ
வல்லதுலகனன்கர்ம னுமிற்சிங்காசனமுண்டாமே

இ-ள்- பாக்கியாதிபதி வாகனத்தானதிபதி யுடனே கூடியிருக்கவி யாழம் வாகனத்திற் பெலமாகியிருக்க இரண்டில் லக்கினனுதனிருக்க வாகனமுடையவனாகியிருப்பான் பாக்கியாதிபதியும் லக்கினாதிபதியு

ம் நாலாமிடத்துக் குடையவனுடனேகூடியிருக்கஅல்லதுகர்மத்திலி ருக்க பாவர்சாள் பார்த்திருக்க கர்மாதிபதியுடன் லக்கினாதிபதி கூடி யிருக்க சிங்காசனபதியா யிருப்பான்-எ-று. ௰எ

ஆசனலாபத்தானும் பாக்கியத்தனத்தாமூன்றில்
வாசனொமொருவனானு பதிக்குகேந்திரத்திலாகத்
தேசறுலாபமைந்திற் குருவீடாய்ச்சிறக்குமாகில்
யோசனைபலநாடாளு மகண்டசாம்ராச்சியோகம்

இ-ள்- லாபேசனும் பாக்கியேசனும் தனாதிபதியும்இதிலேயொருவ ர் சந்திரனுக்கு கேந்திரத்திலிருக்க லாபமாகிலுந் தனமாகிலும் வரு ம் ஐந்தாமிடங் குருவீடாயிருக்க அகண்டசாம்ராச்சிய யோகம்வரும்.

அகண்டவாகனத்தான்கர்மம் தானத்தானுடனேகூடப்
புகன்றசெய்தனவிசேஷம் பொருந்திலாப்பூமிலாப
மிகுந்திடுங்கர்மநாலாய் மித்திரனாகநாலான்
மகிழ்ந்துடன்கூடப்பார்க்க வள்குருலக்கினம்பார்க்க

இ-ள்- நாலாமிடமுடையவன் பத்தாமிடமுடையவனுடனேகூடி யிருக்கச் செவ்வாய் உச்ச ஸ்வட்சேத்திரத்திலிருக்கவெகுபூமிலாபமு ண்டு கர்மராசி யுடையவன் பெலவானாயிருக்க நாலாமிட முடையவ னுடனேகூடி மித்திரனாகியிருக்க க்ஷேத்திர ஸ்தானாதிபதி சுபனுட னேகூடியிருக்க அல்லது பார்க்க காரகனைவியாழம் பார்க்க வெகுக்ஷே த்திரமுண்டு-எ-று. ௰கூ

பாக்கிலுஞ்சேத்திராதி யொற்றுத்தராசிபார்க்கக்
கார்க்கமாய்ப்பெலனாய்நல்ல கோபுராங்கிசமேயேரத்
திர்க்கமாய்ச்செய்வாய்தானு மித்திராங்கிசமேயேரத் [ர்
சேர்க்கையாய்ச்சேத்திரங்கண் மிகவுண்டாய்ச்செழித்துவாழ்வா

இ-ள்- க்ஷேத்திராதிபதி ஒற்றித்தராசியிலிருக்ககோபுராங்கிசமேற ச் செவ்வாய் மிருத்துவாங்கிசமேற வெகுக்ஷேத்திரமுண்டு-எ-று.

செழித்திடுங்கிரகத்தானுஞ் சகோதரனுடசேர்ந்தி
வழிப்படிற்பிராதுர்சேத்திரம் வருவதுமிகுவதாகும்
விளைத்திடுஞ்சேத்திராதி விரும்புமங்கிசத்தானலிற்
றறைத்தவனுடனேகூடிற் சேத்திரந்தானுண்டாமே

இ-ள்- மூன்றாமிடமுடையவனும் நாலாமிடமுடையவனும்கூடில் பிராதுர்க்ஷேத்திரமடையும் க்ஷேத்திரஸ்தானாதிபதியேறின அங்கிசா திபதி க்ஷேத்திராதிபதியுடனே கூடியிருக்கவெகுட்சேத்திரமுண்டு.

நான்காம்பாவம் முற்று.

—( )—



உ

கடவுள் துணை,

——()——

# ஐந்தாம்பர்வம்

——(-)——

சேத்திரத்தானந்தன்னை செகபதிவேங்கடேச
மூர்த்தியுமுரைத்தாரைந்தா மிடப்பலன்மொழிவதாகப்
போத்தியாமார்ப்பத்தான புத்திரன்பிருகுபுத்தி
சாற்றுமந்திரங்களெல்லாந் தழைத்திடப்புகன்றவாறே

இ-ள்- ஐந்தாமிடங்கொண்டு ஆர்ப்பனம் புத்திரத்தானம் பிருகுரு புத்தி மந்திரம் இவைகளைச்சொல்லவது-எ-று. க

தழைத்திடுமைந்தாம்வீரு புதனதுவீடாய்ச்சாரப்
பிழைத்திடச்சனியின்வீடு நற்சனிபின்னைபார்க்கிற்
றறைத்ததாச்செழித்தபுத்ரத் தானன்சேரங்கிசத்தா
னுழைத்திடுஞ்சட்டவட்ட வியமுடையுண்டாய்நாசம்

இ-ள்- புத்திரத்தானம் புதட்சேத்திரமாக அல்லது சனிவீடாகக் குளிகனுவது சனியாவது அந்தத்தானம் பார்க்கச்தெத்துபத்திரத்தா னுதிபதியெடுத்த வங்கிசமுடையவன் சஷ்டாட்டமவியங்களுக்கு அதிபதியாகவும் புத்திரருண்டாய் நாசம்வரும்-எ-று, உ

உண்டெனுமைந்தாம்வீட்டைக் குருபார்க்கப்புத்திரோனுங்
கண்டிடப்பெலனேயாகி லக்கினன்பார்க்கிலுண்டாந்
திண்டிறற்புத்திராதி குருவுக்குகேந்திரகோணுய்ப்
பண்டிதன்குடும்பன்பார்க்கப் புத்திரபாக்கியமுண்டாமே

இ-ள்- புத்திர தானத்தை வியாழம் பார்க்கத் தனுதிபதி பரிபூரண பெலவானுக லக்கினுதிபதி பார்த்திருக்க புத்திரலாபமும்தனலாபமும் உண்டாம் புத்திரத்தானுதிபதியும் வியாழமுங் கேந்திரத்தி லிருக்க குடும்பேசன்பெலவானுயிருக்க வெகுபுத்திரயோகமுண்டாம்-எ-று

ஆமெனும்புத்திராதி சுக்கிரனுகிவந்தத்
தாமமாந்தானந்தன்னைப் பாக்கியன்பார்க்கப்பெணஞ்

சேமனுஞ்சேயுமஞ்சாஞ் சேத்திரமுடையனுக
வாமமாஞ்சிங்கமீன மேடமேற்றெத்துதானே

இ-ள்- புத்திரத்தானபதி சுக்கிரனுக புத்திரத்தானத்தை பாக்கியா திபதி பார்க்க அவனுக்கும்பெண் மெத்தவும்பிறக்கும் புத்திரத்தான த்திலே செவ்வாயிருக்க புத்திரத்தானன் மேடம்சிங்கம் மீனமாகச் சு பக்கிரக திருஷ்டியில்லாதிருக்க அவனுக்கு அநித்தியத்தில் தெத்து புத்திரன் எ-று. ச

தெத்தியபுதனுமஞ்சா மிடமதாய்பாவர்சேர
கத்தியேலக்கினத்தி னுலிலாய்ச்சுபக்கோளொட்டாய்த்
திட்டெனப்பாக்கியத்தா யல்லதுபார்வையாகப்
புதல்வராற்றமற்றப் புகழுடன்வாழுவானே

இ-ள்- புதன் ஐந்தாமிடத்திலிருக்க லக்கினத்திலும் நாலாமிடத்தி லும் பாவியிருக்க சுபக்கிரகமிடம் பாக்கியத்திலிருக்க அல்லது பார்க் கப் புத்திரனில்லை-எ-று, ரு

வாழும்லக்கினத்திற்செவ்வாய் மந்தனுமட்டமத்தா
யாளிலந்திரவியாகிச் சுபர்நோக்கிலெத்தாகு
மீதிலக்கினேசன்றூரே சனுமுயர்வியாழந்தானுங்
கோளியாய்த்தனத்தான்பாவ வினனேற்குழவியில்லை

இ-ள்- செவ்வாய் லக்கினத்திலிருக்க அஷ்டமத்திற் சனியனிருக்க ஐந்தில் சூரியனிருக்க சுபாள்பார்க்கில் காலாந்தியத்தில் தெத்துபுத்தி ரன் வியாழம் பெலவீனனுக புத்திராளில்லை, சு

இல்லெனும்வியாழத்தானு மிருந்திடஞ்சேய்வீடாக
வல்லதேமந்தன்வீட்டிற் றானுதியாகிற்பிள்ளை
சொல்லியவேழாந்தானஞ் சுக்கிரனிருக்கப்பார்க்க
வில்லையேறபுகரின்வீடேற் பகசும்பனெய்துவானே

இ-ள்- வியாழமிருந்தவீடு செவ்வாய்வீடாக சனியின்விட்டிற்புத்தி ரத்தானுதிபதியிருக்க அன்னியதாக ஒரு பிள்ளையை வளர்ப்பன், ஏ ழிற் சுக்கிரனிருக்கப் பார்க்க அல்லதுசுக்கிரட்சேத்திரமாக இருக்கப் பகசும்பனம்பண்ணுவன்-எ-று.

தனபதியுடனேவெள்ளி சாரவுங்குளிகன்பார்க்க
வினவிடாப்பகற்றிற்றூனுஞ் சும்பனமியற்றுமின்னே

பனுதினமேழெட்டும்பாவியால் வியஞ்சேயாகத்
தினகரனேழிற்றார மூன்றுபோய்நாலாள்சேரும்

இ-ள்-குடும்பாதிபதியுடனேசுக்கிரன்கூடியிருக்கருளிகன்பார்க்கப் பககும்பனம்எ-அ-ல்பாவியிருக்க வியப்பத்திறசெவ்வாயிருக்க சூரியனேழிலிருக்க மூன்றுகளத்திரம் நாசமாய் நாலாவதுவரும்-எ-று. அ

சேர்ந்திடுங்களத்திரத்தி நீசனுயாறன்சேர
வாழ்ந்திடுமேழாம்வீடும் பாவர்விடாகமாகச்
சார்ந்தமாங்குடும்பன்றன்னில் பாவர்கள்சரர்ச்சார
வாய்ந்தவாய்விரண்டுமாய்ந்து கொள்வதுமூன்றுதாரம்

இ-ள்- இரண்டாமிடத்தில் பாவியாயிருக்க களத்திரத் தானத்தில் ஆறாமிடமுடையவ நீசனுயிருக்க ஏழாமிடம்பாவர்விடாகயிருக்கஇர ண்களத்திரம் நாசமாய் மூன்றுங்களத்திரமுண்டாம்-எ-று, சூ

தாரமாங்காரகன்றன் சனியுடன்கூடப்புத்தி
திரனும்புகர்தான்பொன்றன் சசிகூடக்குறளாயப்பின்போம்
வாரமாம்வியாழம்பாக்கிய கேந்திரம்வாழச்சுங்க
னாரலேலாபஞ்சேரி லவர்நோக்கிலழகாம்பாரி

இ-ள்-களத்திரகாரகன் சந்திரனுடனேகூட அல்லதுபுதனுவதுவியாழமாவதுகூட அல்லது சுக்கிரன்கூடகளத்திங்குறளாய்விபசாரமுண்டென்பது பாக்கியத்திற்கு கேந்திரத்தில் வியாழமிருக்க லாபத்திற்குக் கேந்திரத்தில் சுக்கிரனிருக்க அன்னியபுண்ணிய விடுமாறியிருக்க அனுகூலக் களத்திரமென்பது-எ-று. ௰

பாரியாமேழாம்விட்டான் பரமோச்சம்பகர்ந்தவேழிற்
சீரியசுபரேவாழ வன்றியுந்தெளிந்தசுங்கண
சூரியவுச்சனுகிற் குலபதியாகவேண்டு
நாரியமூன்றுகொண்டு நலமுடனிருக்குநங்காய்

இ-ள் ஏழாமிடமுடையவன்பரமவுச்சனுகஅந்தத்தானத்தில் சுபக்கிரகமிருக்க அல்லதுசுக்கிரன் பரமவுச்சனுக யிருக்கமூன்று களத்திரமுண்டாம்-எ-று. ௰க

நங்கையேலக்கினேசன் சேயெனவியாழம்நாடத்
தங்கியகல்லாலன்றி சூரியாற்சாமாமாறி

ஞங்கடிகெட்டுவேயம் பாவராயிலக்கினேச
னங்குளோர்ப்பலனேயாகி மற்பமாயாயுடானே

இ-ள்- லக்கினேசன் செவ்வாயாகப் பாவிகள் பார்க்கக்கல்லினால்விரணம் சஷ்டாட்டமங்கள் வியத்திற்பாவியிருக்க லக்கினேசன் துர்ப்பெலனாகியிருக்க அற்பாயுசு-எ-று. ௰௨

ஆயுவாம்லக்கினாதி பதிபெலனாக நல்ல
நாயகஞ்சுபரேபார்க்கக் கேந்திரஞ்சுபரே நண்ணத்
தீயவர்நோக்கிடாதேற் றீர்க்காயுமாசனாதி
நேசமாய்வாழப்பூவி னெரியிருங்காயத்தானே

இ-ள்- இலக்கினாதிபதி பெலனாக சுபக்கிரகம்பார்க்க கேந்திரங்களிருக்க பாவிகள்பார்த்திருக்க மிருத்தியுவில்லாமல் தீர்க்காயுளாய்ராஜவல்லவனா யிருப்பான்-எ-று. ௰௩

இலக்கினமுன்னை யவேவந்தன் கேந்திரத்திரிகோணத்தாய்
விலத்தேழாம்வீடுவியாழ வீடாகவேழில்வந்த
பெலத்துடன்குருவாய்ப்பாவி பார்க்கிலேபிள்ளைதானுங்
குலத்துடனூண்டுநூறு குணமுடன்வாழுவானே

இ-ள்- இலக்கினாபதி கேந்திரத்திரிகோணத்திலிருக்க அஷ்டமத்தில்பாவி யில்லாதிருக்க ஏழில்வியாழ மிருந்துபார்க்க புண்ணியவானாக நூறுவயசுயிருப்பான்-எ-று, ௰௪

வானெனுமொன்பத்தஞ்சு பத்திலக்கினத்திற்பொற்றோன்
றுனவன்புந்திசுங்கன் சாரின்மாதோடந்தீரும்
பானுவாய்பகல்பிறக்கின் மதியுமார்லாபஞ்சாரத்
தினமாங்கோடிதோடந் தீர்த்திடுஞ்செய்குத்தானே

இ-ள்-௯ மிடம்- ௫மிடம்- ௰மிடம் இலக்கினம் இவைகளில் வியாழமாவது புதனாவது சுக்கிரனாவது இந்தத்தானங்களி லிருக்க எத்தனை தோஷங்களிருந்தாலுந்தீரும் பகலிற்பிறந்ததற்குச் சூரியன் ராத்திரிபிறந்ததற்குச் சந்திரன் லக்கினத்துக்கு லாபத்தில்நிற்கையில்கோடி தோஷமிருந்தாலும் தீரும்-எ-று. ௧௫

தீரனுமிலக்கினேசன் பணபரஞ்சேரவெள்ளிய
யாரவேபார்க்கவன்றி யழகுபொன்னுன்கூடத

தாரசாமரமாமியோகம் ராசபூச்சியவித்வானும்
பாரெலாந்துதிக்கவெண்ப தாயுளின்மிரிப்பனம்பி

இ-ள்- இலக்கினேசன் பணபரத்திலிருக்க் சுபக்கிரகத்தால் பார்க்கப்பட்ட அல்லதுவியாழத்துடனே கூடியிருக்கச் சாமரயோகம் இராஜபூச்சியனுகவும் வித்துவானுகவும் உலகாளுந்தனுகவும் வேதசாரமறிகிறவனுகவும் எண்பது வருஷமிருப்பான்-எ-று, மசு

நம்பியாய்வியாழமிந்து தனக்குக்கேந்திரத்தினண்ண
வம்புவிகுருவிலேனுடே யன்யபுண்ணியங்கேநரிக்கத்
தும்பிகளிடையேசிங்கந் தோன்றியதாகவென்னத்
தம்பியும்வாழ்வானிந்தத் தாரணிமதிக்கத்தானே

இ-ள்- சந்திரனுக்கு கேந்திரத்தில் வியாழம்நிற்க வியாழம்கேந்திரத்திற் சனிநிற்க ஆயிரம்யானைக்கு ஒருசிங்கம்போலே வாழுவான் எறு.

மதித்திடும்பாவர்சட்ட வட்டமதியமேவாழ
வுதித்திடுஞ்சுபர்கள்கேந்திற் றிரிகோணந்தன்னின்மேவப்
பதித்திடுமிலக்கினேசன் பெலமுறிற்றீர்க்கவாயுள்
கதிப்புறவாழ்வான்லோகங் காத்துமிக்காகத்தானே

இ-ள்-சஷ்டாஷ்டம் வியங்களிற்பாதிகளிருக்க கேந்திரதிரிகோணத்தில் சுபாளிருக்க இலக்கினேசன் பெலவானு யிருக்கத்தீர்க்காயசால் வாழ்வான்-எ-று. மஅ

மிக்கதாமதிக்குவெள்ளி கேந்திரமிருக்கவிந்துந்
தக்கதாய்கவிக்கிக்கேந்திரந் தனிலுறிலாயுவுண்டா
மக்களின்மிகுந்துநல்ல வாகனயோகமுண்டாய்த்
தக்கதாயிருப்பதாகச் சாற்றிடும்வேதமூன்றும்

இ-ள்- சந்திரனுக்கு கேந்திரத்தில் சுக்கிரனிருக்க சுக்கிரனுக்குகேந்திரத்தில் சந்திரனிருக்க திர்க்காயுசும் வாகனமுமுண்டாம்-எ-று.

மூன்றிடமுடையகோவு மிராகுவுமூன்றில்வாழத்
தோன்றிலேமூன்றுங்கூட ராகுவும்லக்கினத்தில்
வாழ்ந்திடிற்சர்ப்பபீதி வருங்களரோகமுண்டா
மீன்றவர்பார்த்துதர்மம மியற்றுவதியற்கையாமே

இ-ள்- மூன்றாமிடமுடையவனும் ராகுவுங்கூடியிருக்க இலக்கினத்தில் மூன்றாமிடத்தானும் ராகுவுமிருக்க சர்ப்பபீதியுங்களரோகமும் உண்டாம்-எ-று, உ௰

இபற்கையாம்லக்கினங்கள் சலமெனக்குருவும்வாழ
முயற்சியாய்மூன்றாம்வீட்டான் கூடநீராகும்பீதி
லயத்தனுநாற்காலாலும் வரும்பயமென்றுமுன்னோர்
நயத்துடனல்லோராய்ந்து நவின்றனர்புலவர்மாதோ

இ-ள்-இலக்கினத்திற்குருவிருக்கமூன்றாமிடமுடையவன் கூடியிருக்க அந்தராசி ஜலராசியாயிருக்க சுசலபீதியும் நாற்கால்மிருகத்தினால் அபாயமுமுண்டாம்-எ-று. உக

விரித்திடும்மூன்றாம்வீட்டான் சூரியனுடனேமேவப்
பரித்தசெய்மதியுங்கர்ம்ம பாகனுமிராகுங்கூடத்
தரித்திடும்மினிநல்ல சாற்றியநாலாம்வீட்டான்
பிரித்தநல்லக்கவர்மைந்து பெறநல்லகிரகமுண்டே

இ-ள்- மூன்றாமிட முடையவனுடனே சூரியன்கூட சந்திரனுடனே கர்மமாதிபதிகூட ராகுவுடனேசெய்வாய் கூடியிருக்க சவுமியனும் சார்த புத்திபுடையவனு யிருப்பன் சமிடமுடையவன் ஐந்தாம்வற்கமேற நல்லகிரகமுண்டாம்-எ-று. உஉ

கிரகனுநாலாம்வீட்டான் லக்கினன்லக்கினத்தாய்
சுரர்குருமுதலோர்பார்க்க நற்கிரமஞ்சூடிவைக்கு
நரபதிநாலாம்வீட்டான் கேந்திரமுறிலேநல்ல
திரமெனுங்கிரகந்தானுந்தேடிடா துடனேவாய்க்கும்

இ-ள்- நாலாமிடத்துக் குடையவன் இலக்கினாதிபதி யுடனேகூடி லக்கினத்திலிருக்க சுபக்கிரகங்களாலே பார்க்கப்பட்டால் பிரயத்தினமில்லாமல் நல்லகிரகம்வாய்க்கும் நாலாமிடமுடையவன் பெலவானுசகேந்திரங்களிலிருக்க நல்லகிரகம்வாய்க்கும-எ-று. உ௩

வாய்ந்திடும்வாக்கினேசன் சுவர்க்கமைந்தும்வாய்க்கப்
பாக்கியகிரகமுண்டாம் பரமனுங்கிரகநாதன்
ருக்குபங்கிசத்தானல்கின் கெந்திரன்சாரநல்ல
நீர்கமாங்கிரகமுண்டாய்த் தனலாபங்கிட்டுந்தானே

இ-ள்- நாலாமிடமுடையவன் சுவர்க்கமாய் சுவர்க்கமேறநல்லகிரக முண்டு நாலாமிடமுடையவன் அடுத்தஅங்கிசாதிபதி லக்கினகேந்திரங்களிலிருக்க நல்லகிரகமுந் தனலாபமுண்டாம்-எ-று. உச

கிட்டியகிரகசிங்கா சனமேறிற்செங்கல்வீடாந்
திட்டமாம்நாலாம்வீட்டான் சவுமியாள்சேரமுன்பா
மிட்டமாங்காரகேசன் சேய்நோக்கிலெவர்க்குமிக்கா
யெட்டெனவள்ரிபந்து மானெனவிளங்குவானே

இ-ள்- கிரகாதிபதி சிங்காசனுங்கிசமேறிற் செங்கல்வீடு கட்டுவன் சமிடமுடையவன் சவுமியகிரகங் கூடியிருக்கச் சவுமியாள் பார்க்கபந்திபூச்சியனுயிருப்பன்-எ-று. உரு

பந்துதானத்தான் றன்னை வியாழம்பாரார்திருக்க
வந்தமாங்குருசட்டி யங்கிசமதிலேவாழ
நிந்தனைபிறரேசொல்ல நீசர்வாழகத்தில்வாழ்ந்து
புந்தியுமன்றிப்புலவர் பூவனுமாவனல்லாய்

இ-ள்- பந்துத்தானத்தை வியாழம் பாராதிருக்க பந்திசன் குருசஷடியங்கிசமேற நீசக்கிரகத்தில் வாழ்ந்திருப்பான்-எ-று. உசு

நல்லதாம்பந்துத்தானம் பாவியேநாடிவாழ
வல்லதுதனத்தான்பாவி கூடவேயினனுகும்
வல்லவர்நாலாம்வீட்டா நீசனுய்நாலின்பாவா
னில்லெனிற்பந்துவாலே கலகனுயிருப்பநல்லாய்

இ-ள் பந்துத்தானத்தில் வெகுபாவிகளிருக்க அல்லது பந்திதானுதிபதியுடனே பாவிகளிருக்க வெகுநினனுயிருப்பான் நாலாமிடத்தில்பாவிகளிருக்க அந்தத்தானுபதி நீசாங்கிசமேற நித்தியகலபந்துவாகயிருப்பன்-எ-று. உஎ

இல்லிடஞ்சரமேயாக ராசியான்சரத்திலேற
பல்பலகிரகமுண்டாய்ப் பாக்கியஞ்சுகமதாமே
சொல்லியசுகத்தான்பாவ சகிதனுய்ச்சுபாள்பாராம
லெல்லையிலேழானுலான் றன்னையொன்றிச்சிப்பானே

இ-ள்- நாலாமிடஞ் சரலக்கினமாக இந்தராசிநாதன் சராராசியிலேயிருக்க அனேகிரகமுண்டாம் நாலாமிடமுடையவன் பாவியுடனே

கூடியிருக்க சுபக்கிரகம் பாராதிருக்கவேழாமிடமுடையவனுடனே நாலாமிடமுடையவன் கூடியிருக்கமாதாவுக்குச்சமானமானபேரைக் கூடுவான்-எ-று.. ௨௮

இச்சையாங்களத்திராதி மூன்றினிலிருக்கநாலான்
சட்டையாய்ப்புகரோட்டாகிற் சகோதரசமானசங்கந்
தச்சுரகிரகத்தானஞ் சனியுறினாலாஞ்சுங்க
னச்சியில்வியமாய்ப்பாக்கியஞ் பாவரிற்றுயேசங்கம்

இ-ள்- ஏழாமிடமுடையவன் மூன்றாமிடத்திலிருக்கச் சுபக்கிரகத்துடனே நாலாமிடமுடையவன் கூடியிருக்கச் சகோதரசமான மானசங்கம் நாலாமிடத்திற்சனியிருக்க அந்தவீட்டிற்குடையவன்-௰௨ல் சுக்கிரனுடனேகூட பாக்கியத்தானமும் பாவிவீடாயிருக்கமாதுரு சமானசங்கம்-எ-று. ௨௯

சங்கையாங்சத்துரேச னுலிலேசாரவிந்தே
யிங்கிதன்புதனுங்கூட வில்லுமேபுருடர்விடேற்
பங்கனமாதாவைக்கப் பாம்புதானுலாய்ச்செவ்வாய்
மங்கவேபார்க்கப்பாது மகனுங்கூடிடிலவ்வண்ணம்

இ-ள்- ஆறாமிடமுடையவன் சுல்லிற்கச்சந்திரனுடனே கூடப்பார்க்கவந்த வீட்டான் புருஷகிரகமாயிருக்க முன்சொன்னபலன் சுல்ராகுவிருக்க அவனுடனே செவ்வாய்பார்க்க சனியுடனே சூரியன்கூட முன்சொன்னபலன்-எ-று. ௩௰

வண்ணமாம்பாம்புமிந்து மாதுருத்தானமாகிற்
புண்ணியசுபாபாரரேற் பொதுவைசியர்களின்விந்தா
நண்ணியபுகரும்பானு நாலிலாய்ச்செவ்வாய்பார்க்க
வெண்ணிலாச்சத்திரியர் விந்தெனவியம்பலாமே

இ-ள்- ௪-ராகுகேதுவுடனே சந்திரனிருக்க வைசியருடைய புத்திரனும் சூரியனுடனேகூடி சுக்கிரன் நாலிலிருக்க செவ்வாயாலேபார்க்கப்பட்டால் ட்சத்திரியருடனேகூடித் தரித்தகெர்ப்பம்-எ-று. ௩௧

விந்துவாமிலக்கினேசன் சுபனுடன்விரும்பவன்றிச்
சுந்தரன்பிதாவாற்கூடப் புத்திரன்றேன்றிப்பாற்க
நிந்தையாம்பார்கள்சாதஞ் சுகத்தினிற்பாவிநிற்க
மந்தமாதிலக்கினன்முன்றான் பாற்கிலவ்வண்ணமாமே

இ-ள்- இலக்கினேசன் நாலாமிட முடையவனுடனே கூடியிருக்க அல்லது பாக்கியனுடனேகூடி ஆறுமிடமுடையவன் பாற்கப்பராசாதகன் மாதுருதானத்தில் பாவிநிற்க மாதுருகாரகன் பாவியுடனேகூடியிருக்க இலக்கினாதிபதி மூன்றுமிடமுடையவனுடனேகூடி நிற்க பரசாதகன்-எ-று. ருஉ

வண்ணமாஞ்சுகதானத்திற் பாவியாய்மாலோன்பார்க்கப்
பெண்ணதாமாதுர்த்தானன் குளிகனுங்கூடிநீசா
ளெண்ணிலாச்சட்டவட்ட வியங்களில்வாகனன்று
னண்ணைச்சேய்மாந்திபார்க்க ராசிசேதகமேநாடும்

இ-ள்- மாதுருதானத்திற் பாவிநிற்க புதனாலேபார்க்கப்பட்ட மாதுருத்தானாதிபதி குளிகனுடனேகூட ஈனவிந்துசஷ்டாஷ்டமவியங்களில் வாகனாதிபதிநிற்க குளிகன்செவ்வாயால் பார்க்கப்படலாபாதிபதிகூட ஒற்றித்தராசியாக இருக்கவாகனங் கெத்தகமென்பது-எ-று.

நாடியவாகனேசன் புகருடன்வியந்தியண்ணத்
தேடுவான்சுபமாய்வீடு பிதுர்மதுர்கிரகஞ்சேரான்
பாடிபலக்கினாதி பதியுடன்பாக்கியேச
ஞேடியும்பார்க்கர்மன் சுபன்கூடவாகனங்கள்

இ-ள்- ச-மிடமுடையவன் வியத்திற்சுக்கிரனுடனே கூடிநிற்கமாதாபிதாவழியில்லாமல் சுபக்கிரகந்தேடுவன் இலக்கினாதிபதியும் பாக்கியாதிபயுமன்றி புண்ணியர் பார்த்திருக்க கர்மேசனாலாமிடமுடையவனுடனேகூட அவனுக்கு கஜதுரகமுண்டாம்-எ-று. ருச

சுகனெனும்பிருகுபால னுச்சமாய்த்தோன்றவென்பான்
புகலருங்கேந்திரத்தாய் வாகனம்பூமிசேருந்
தகுமெனத்தனத்தானுச்சந் தனதுசேத்திரமாய்வீய
முகமெனச்சுதனைப்பாற்கின் மூன்றுவாகனமுண்டாமே

இ-ள்- உச்சனாய்சுக்கிரனிருக்கப் பாக்கியாதிபதி கேந்திரத்திலிருக்கவெகுவாகனகஜமுண்டு இரண்டாமிடமுடையவன்உச்சவட்சேத்திரத்திலிருக்க அல்லதுவியத்திலிருக்க பாக்கியாதிபதிவாகனத் தானாதிபதியைப்பார்க்க மூன்று வாகனமுண்டாம்-எ-று, ருரு

பாக்கியன்கேந்திரத்தாய் சுகந்தனைவிரும்பிப்பார்க்க
வாகமுஞ்சுகமுண்டு புகரேழில்வெகுவாந்தாரந்

தேக்கியபுதனேயேழிற் பார்திரிசேர்வன்பொன்னன்
றாக்கியவேழிலாகிற் சோரத்தார்பிரியனுமே

இ-ள்- பாக்கியன் கேந்திரத்திலிருக்க நாலாமிடமுடையவனைப் பார்க்க அவனுக்கு சுபலாபமஉண்டு சுக்கிரன் ஏழிலிருக்க வெகுஸ்திரியுண்டுபுதனேழிலிருக்கப் பரதாரம் வியாழமேழிலிருக்க சோரஸ்திரீபிரியன்-எ-று. ௬௬

ஏழிலேசனியனிசி யிணங்குஞ்சேய்வெகுஸ்ரீயென்க
தோழனும்பானிரண்டிற் றோன்றிடிற்பரதாரம்மாங்
காலையாமிலக்கினதி குடும்பன்சத்துருவாய்க்காண
யேழையாம்புகரும்பால ரிணங்கிலீனத்தரியென்ப

இ-ள்- சனிஏழிலிருக்க கிழ்ஜாதிஸ்திரீயோகம் செவ்வாயிருக்கில் வெகுஸ்திரீ சூரியன் இரண்டிலிருக்கப் பரதாரம்லக்கினதிபதியும் குடும்பனுஞ் சத்துருவாகி குடும்பத்திலிருக்க சுக்கிரன் பாவக்கிரகத் துடனேயிருக்க ஈனபரஸ்திரீசையோகம் சுபக்கிரகம்பார்க்கில் இல்லையாம்.

ஈனமாம்பாவரோடு மிணங்கிலக்கினத்தினோடும்
பானுவும்பாவிகூடிச் சத்துருத்தானஞ்சாரத்
வானதோர்சுபர்கள்பார்வை யமர்தரவில்லையாதிற்
றீனமாந்தாரந்தானும் பரர்களைச்சேருவாளே

இ-ள்- சந்திரலக்கினத்திற் பாவிநிற்கலக்கினதிபதியுடனேபாவிகூட குடும்பத்தானத்தானத்தில் சத்துருவிருக்க விபசாரம் கர்மேசன்இரண்டாமிடமுடையவன் களத்திரநாதன் கர்மத்திலிருக்க அந்தகளத்திரஞ்சோரியாம்-எ-று. ௬௮

சேருவான்பாவியொன்று நாலிலாய்ப்பரத்தைத்தேடி
தாரெனும்புத்திரேசன் கூடச்சத்துருத்தானத்தான்
கோரமாய்ப்பார்க்கவந்தத் தாரமுங்குரூரமாகி
யாரவேகள்ளராலே பிள்ளையுண்டாவாடாளே

இ-ள்- நாலாமிடத்தி லொருகிரகமிருக்க பரஸ்திரீகமனி புத்திரேசனும் ஏழாமிடமுடையவனுங் கூடியிருக்க அவனை ஆறாமிடமுடையவன்பார்க்க கள்ளனுபகனால் பிள்ளையுண்டாவாள்-எ-று. ௬௯

தோன்றிமொரும்வீட்டான் பெலனின்றிச்சுங்கன்கூட
லாண்டபாவிகளேபார்க்கி லவ்வண்ணம்பாக்கியாதி

காண்டுடுங்களத்திராதி யாறெட்டிபன்னிரண்டிற்
லின்றபுத்திரனூர்பார்க்க லின்மையேன்மிகவுண்டாமே

இ-ள்- ஆறாமிடமுடையவன் பெலவீனனாகச் சுக்கிரனுங்கூடியிரு க்க அவர்களைப்பாவிகள்பார்க்க முன்சொன்னபலன் பாக்கியாதிபதிக ளத்திராதிபதி சஷ்டாஷ்ட மவிசங்களிலிருக்கப் புத்திரத்தானதிபதி யாலே பார்க்கப்பட்ட முன்சொன்னபலன்-எ-று, ௬௰

மகவெனுந்தானத்தானுங் களத்திரம்பொருந்தவேழான்
மிகவும்பாவியுமாய்க்கூடச் சுக்கிரன்பெலனில்லானேல்
மகவளக்கொர்பத்தோடே யழிவதுதிண்ணமாகப்
பகருவீர்சுபக்கோடானே பார்வைதக்கதுவாய்மானே

இ-ள்- அஞ்சாமிடமுடையவன் ஏழிலிருக்க ஏழாமிட முடையவ ன் பாவியுடனேகூட சுக்கிரன்பெலவீனனாக யிருகத்தாரங் கோபத் துடனேமரணம்-எ-று, ௬௧

வாய்ந்தமதிநீசமுறச் செவ்வாய்பார்க்கச்சுக்கிரனு
மாய்ந்தமூன்றாமிடமாக மூன்றுதிரிகோணம்மேவிற்
றேய்ந்ததாரம்விடங்களைத்தான் றின்றுசோழுங்களத்திரனு
மேய்ந்தகாரகன்றானுச்ச மெனின்மூன்றுதாரமாமே

இ-ள்- சந்திரநீசனாகசெவ்வாயாலேபார்க்கப்பட்டசுக்கிரன்மூன்றா மிடத்திலிருக்க மூன்றுந்திரேக்காணம் பாவத்திரேக்காணமாகதாரம் விஷபட்சணத்தால் மரணம் களத்திரத் தானதிபதியுங்களத்திரகார கனும்உச்சனாக அவனுக்கு மூன்றுதாரம்வாய்க்கும்-எ-று. ௬௨

தாரனாயகனும்பாவு தனத்தவன்பாவியாகக்
கோரமாஞ்சனுசேய்ராகு கூடிற்றாரநாசந்
தீரனாலாம்வீட்டிற் சுடர்சேரப்பாக்கியேசன்
பாரமாயுச்சமேறக் களத்திரஞ்சுகமுண்டாமே

இ-ள்- களத்திராதிபதி பாயாவியிருக்ககுடும்பேசனும் பாவியா யி ருக்கசனிசெவ்வாய் ராகு கூடியிருக்கக்களத்திரநாசம் நாலாமிடத்தில் சுபனிருக்க பாக்கியேசன் பரமவுச்சனாயிருக்க நல்லகளத்திரம் வாய்க் கும்-எ-று- ௬௩

சுகமெனுமேழாம்வீட்டான் லக்கினன்றேன்றிவாழ
மகபதிகர்மந்தன்னி லுறின்மகாமதனேயோகம்
வெகுதிரிபுணர்ந்துகாம விரதனாயோகவானாய்த்
தகைமையுமுடைத்தாய்கீர்த்தி வானுமாய்த்தழைத்துவாழ்வான்




இ-ள்- ஏழாமிடமுடையவன் லக்கினத்திலிருக்கக் கர்மாதிபதி கர்மத்திலிருக்கப் புதன்யோகவானாய்த் தகமையுடைத்தாய் வெகுஸ்திரீயுண்டு-எ-று. சசு

ஆனதோர்புத்திரேசன் சுபனுடனாகவந்த
மீனவன்வியாழம்பார்க்க புத்திரர்மிகவுண்டாகுந்
தானவன்புத்திரேசன் லக்கினத்துடனேகூட
நானெனவியாழம்பார்க்க நல்லபுத்திரருண்டாமே

இ-ள்- புத்திரத்தானதிபதியை வியாழம்பார்க்கஅவன்சுபனுடனேகூடப் புத்திரபாக்கியமுண்டு லக்கினேசன் புத்திரத்தானதிபதியை வியாழம்பார்க்க அவன்சுபனுடனேகூடப் புத்திரபாக்கியமுண்டு இலக்கினேசன் புத்திரத்தானதிபதியுடனே கூடியிருக்கப் பரிபூரணபெலமாய் வியாழம் பார்க்க வெகுபுத்திரபாக்கியமுண்டாம்-எ-று. சரு

புத்திரத்தானனீச வீடதாய்லக்கினேச
னத்திடம்வியாழம்பார்க்க லனேகபுத்திரருண்டாகு
மத்துமேபுத்திமைந்தன் வீடைந்தாந்தானமாகிற்
குத்திரன்மாந்திமாதன் பார்த்திடிற்றெய்தாக்கூறே

இ-ள்- புத்திரத்தானதிபதியும் லக்கினதிபதியும் உச்சாஸ்வட்சேத்திரத்திலிருக்க வியாழத்தாலே பார்க்கப்பட்ட வெகுபுத்திரருண்டென்பது ஐந்தாமிடம்புதன்வீடாக அல்லதுசனிவீடாகயிருக்கக்குளிகனாலே சனியாலே பார்க்கப்பட்ட அவனுக்குதெத்துபுத்திரன்-எ-

கூறியபுத்திரேசன் லக்கினன்கூடப்பார்க்க
மாறியுஞ்சனியேபார்க்கப் புத்திரனீசனாக
வேறதான்மனையால்சோரன் விரும்பியும்பிள்ளையுண்டாந்
தேறியேபெறுவாள்பாவி கர்மத்திற்சேர்கிலானே

இ-ள்- இலக்கினதிபதியும் புத்திராதிபதியும் அன்னியோன்னியமாய்ப்பார்க்கச் சனியாலே பார்க்கப்பட்ட புத்திரகாரகனீசனாய்சோரபுத்திரன்-எ-று. சஎ

சேர்க்கிலாளிலக்கினேசனாறிலேசேரவந்தத்
திரானுஞ்சத்துரேசன் பெலமுறவியாழந்தானுங்
கூரமாய்நீசனாகிக் குலத்தினும்மூழ்கதாகப்
பாரியுட்சோரராலே கெர்ப்பமும்பற்றுவாளே

இ-ள்- லக்கினேசனாறாமிடத்திலிருக்க ஆறாமிடமுடையவன் பெலத்திருக்கக் குருநீசனாய்ப்போக முன்சொன்னதுபோலே பாரியுஞ் சோரபத்தாவாலே புத்திரரைப்பெறுவாள்-எ-று. ௩௮

பற்றியும்புத்திரேசன் பாராவதாங்சமேற
புத்திரநாசமுண்டாங் குருரசட்யங்சமேற
மத்திபுநீசமூட மானத்தாம்புதல்வர்நாசஞ்
சத்தியமாகச்சேரத் தயவுடனாய்ந்துபாரே

இ-ள்- ரு மிடமுடையவன் பாராவதாங்சமேறப் புத்திரநாசம்வரு ம்ரு-மிடமுடையவன் குரூரசஷ்டியங்கிசமேற சமூடமாகப் புத்திரா ள்நாசம்வரும்-எ-று. ௩௯

ஆய்ந்திடும்புத்திரேசன் மிருத்தியங்கிசமேயாக
வாய்ந்திடுந்தானந்தன்னிற் பானுவேவாழச்செவ்வாய்
சாந்ததுவியாழத்தோடாய்ச் சகோதரப்பிள்ளைதன்னைப்
போந்தவன்றெத்துகொண்டு புகழுடன்வளர்ப்பதாமே

இ-ள்- புத்திரத்தானாதிபதி மிருத்துவாங்கிசமேற புத்திரத்தானத் தில் சூரியன்நிற்க செவ்வாய் வியாழத்துடனேகூடச் சகோதரான்பு த்திரரைத் தெத்துக்கொள்வார்-எ-று. ௪௰

வளமுறுமிலக்கினத்தின் மாலவர்செய்தான்பார்க்கி
லெளிதெதுப்பரதாரத்தை யிச்சிப்பன்புதல்வரில்லை
யுளமெனும்பஞ்சமத்திற் புதன்வரவுதயநாலி
லளவிலாச்சுபர்களெட்டமில்லை யேற்பிள்ளையில்லை

இ-ள்- புதன்லக்கினத்தி லிருக்கசெவ்வாயாலே பார்க்கப் பட்டால் பரதாரமிச்சிப்பன் புத்திரநாசம்புதன் ஐந்தாமிடத்தி லிருக்கலக்கின த்தில் நாலாமிடத்திற் பாவிநிற்க அஷ்டமத்திற்சுபக்கிரகமில்லாதிரு ப்கப் புத்திரன்முகமறியான்-எ-று, ௪௧

பிள்ளையாமிலக்கினத்திற் சேய்சனிபின்னரெட்டா
யுள்ளதாமைந்திற்பானு சுபதிட்டியுளதாலற்ப
மொள்ளியமைந்தாம்வீட்டா னுச்சமாய்ச்சுபக்கோள்பார்க்கில்
விள்ளதாமத்தியாகிற் புத்திபுமிகவுண்டாமே

இ-ள்- லக்கினத்திற் செவ்வாயிருக்க எட்டிற்சனிநிற்க அல்லதுசூ ரியனிற்க சுபதிருஷ்டி யுண்டாகில் காலாந்திரத்தில் புத்திரலாபம் ஐ

ந்தாமிட முடையவன் பரமவுச்சமேற அவனைச்சுபன்பார்க்கஅல்லது சுபக்கிரக மத்தியிலிருக்க திவ்யபுத்திரயுடையவன்-எ-று.          ருஉ

யுத்துரகாரகன்றான் பூரணபெலமேயாகத்
தெத்தியதநாதந்தானைப் பொன்பாக்கிற்பரமாம்புத்தி
சத்தியமைந்திற்பாவி தானனும்பாவிகூடப்
புத்தியுற்குருரசட்டி யங்கிசம்புத்திரநாசம்

இ-ள்- புத்திரகாரகன் பூரணபெலமாயிருக்கத்தானதிபதியைவியாழம்பார்க்க திவ்யபுத்தி- -யிடத்திற் பாவிநிற்கத் தானதிபதி பாவியுடனேகூட குருரசஷ்டியங்கிசமேறப் புத்திரநாசம்வரும்-எ-று- ருங

நாசமாம்புத்திதான னீசமுடாரியேறப்
பாசமாய்க்கூடிற்புத்திர நாசமாம்பஞ்சமத்திற்
றேசிலாசனியேவாழப் பாவிகடிருட்டியுண்டேற்
காசுறுமங்கனுதி பயித்தியக்காரனுவான்

இ-ள்- ஐந்தாமிடமுடையவன் நீசமுடாரியனுடனே கூடிப்புத்திரநாசம்- ஐந்திற்சனிநிற்க அவனைப்பாபக்கிரகம் பார்க்கபயித்தியக்காரனுவான்-எ-று,          ருச

ஆகியவைந்தாம்வீட்டா னதியுச்சனுகப்பொன்ன
னேகமாய்ப்பார்க்கப்புத்தி ரேசனுமிறைவன்றானு
நாசமாங்கோபுராங்சந் தன்னிலேயாகநல்ல
தேகமாய்த்திரிகாலத்தின் ஞானியாய்ச்சேருந்தானே

இ-ள்- ஐந்தாமிடமுடையவ னுச்சனுகவியாழத்தாற் பார்க்கப்பட ரு-மிடமுடையவன்கோபுராங்கிசமேற அவன்திரிகாலஞானியாயிருப்பான்-எ-று,          ருரு

தேனெனுமைந்தாம்வீட்டான் புருடனுய்ச்செம்பொனேக்க
வீனுமக்களிலேநல்ல புருடரேமிஞ்சவெய்தும்
பாலனுமுறுமைந்தாம் வீடுஸ்திரிராசியாகநீசர்
மேன்மையாய்பார்க்கப்பெண்ணேபெறுவளேமிஞ்சத்தானே

இ-ள்- ஐந்தாமிடமுடையவன் புருஷக்கிரகமாகஅதைவியாழம்பார்க்க புத்திராள்மிஞ்சி யிருக்கும் ஐந்தாமிடம் ஸ்திரீராசியாயிருக்க அதை நீசக்கிரகம்பார்க்கப் பெண்பிள்ளையதிகம்-எ-று,          ருசு

ஐந்தாம்பாவம்-முற்றிற்று.



உ

கடவுள்துணை.

# ஆறாம்பாவம்.

மிஞ்சியபகைவர்நாம்பாவ முதிக்கது முன்னேபின்னந்
தஞ்சமாமாறாம்பாவஞ் சத்துருரோகக்கடனுஞ்
சஞ்சிபிசோரக்கானுந் தாமுமுடைவதாக
வஞ்சலாவேங்கடேச னருளினாலுநவினேனே.

இ-ள். ஆறாம்பாவஞ்சத்துருஸ்தானம்ரோகஸ்தானம்சோரஸ்தானம் என்னும்பெயர் ஆகவேஇப்பலன்களெல்லாம் இந்தபாவத்தைக்கொண்டு சொல்லுவன்-எ-று. (க)

தவமெனுமாறாம்வீட்டோன் குருவாயுதயஞ்சாரப்
பவமெனுமெட்டிற்சார விரணமேபலிக்குமேனி
யவமெனுமைந்தாம்வீட்டோனாறிலாயறோனோடே
கவமெனக்கூடிற்சத்துருமமேபலிக்குமிஞ்ச.

இ-ள். ஆறாமிடமுடையவன்குருவக்கிரமாகலக்கினத்திலிருக்க அல்லது அஷ்டமத்திலிருக்கசரீரவிரணமாகஇருப்பன் ஐந்தாமிடமுடையவன் ஆறாமிடமிடத்தில் அந்தத்தானதிபதியுடனே கூடியிருக்கசத்துருமம்வரும்-எ-று. (உ)

பலிப்பதேமூர்த்தானம் பானுவாய்லக்கினேசன்
மெலித்தவட்டமத்தினிற்கவேபெனுமாறிற்சேரச்
சொலித்திடுஞ்சோரிசெய்தமருந்துறைசுட்டமாகிக்
கலித்திடுஞ்சத்துருமங் கலையுமதனின்மாய்வான்.

இ-ள். ஏழாமிடத்திலாதித்தனிற்கலக்கினதிபதி யெட்டிலிருக்கவியாதிபதிஆறில்நிற்கச் சோரஸ்திரீமருந்தினால் சத்துருமம்வரும்-எ-று.

மாய்த்திடுமேதியுமைந்தாந் தானனுமாறில்வாழ
வாய்த்தெழுமாருகேது லக்கினமயக்குட்ட
மீய்த்திடுமிலக்கினாதி நாவில்சத்துருவோடேய்தக
புயைந்தமாம்புதயமாறு பாத்திடச்சோசைய்த்தி.

கூ

இ-ள். சந்திரனும்புத்திரத்தானுதிபதியும் ஆறில்நிற்கராகுகேதுவுடனேகூடக்குஷ்டரோகத்தினால்மரணம்லக்கினபதிநாவில்நிற்க ஆறாமிடமுடையவன்கூட அல்லதுபார்க்கராகு கேதுலக்கினத்திலிருக்கச்சோகைரோகமும் கொறுக்குநோயுமுண்டாம்-எ-று. (௬)

அத்திபபுதனுமாறி லர்வுடன்கூடமைந்தன்
சத்தியால்கூடப்பார்க்கச் சந்ததமிறைவிநின்று
தத்திலக்கினத்திற்பார்க்க வாதசூலையினன்மேனி
வற்றியேமுடவாய்ப்பாவி யாயிவனிறப்பான்மின்னே.

இ-ள். புதன்ஆறிலேநிற்க ராகுவுடனேகூடசனிகூட அல்லதுபார்க்க ஏழில்ஆதித்தனிற்கலக்கினத்தைப்பார்க்கவாதசூலையினால்சரீரம் விழும்

இரவியும்ரோகத்தானும் லக்கினாதிபனுமொன்றாய்
விரவிபராசிபாக மறிகூடலின்றிப்பார்க்கப்
புரவலன்சலத்தின்பங்கிற் போதறவெட்டுப்பட்டு
திறமெனவிறப்பனுய்ந்து தெளிவினுய்செப்பநன்றே.

இ-ள். ஆதித்தனும்ஆறாமிடமுடையவனும் லக்கினாதிபதியும் ஒருராசியிலிருக்கச் சந்திரனுடனே கூடியிருக்க அல்லதுசந்திரன்பார்க்கஜலக்கரையில்வெட்டுபட்டுச்சாவான்-எ-று. (சு)

நன்றெனும்ரோகத்தானும் பாம்புமொன்றுகிமாறி
னின்றிடச்சேயேபார்க்கநெருப்புமேவலோர்துசாவா
னன்றியும்லக்கினதிசத்தாமைந்துபாவி
கன்றெனப்பார்க்கவாறுன்கர்மமேற்றிரியர்சாவான்.

இ-ள். ராகுவானாலுங்கேதுவானாலும்ஆறாமிடமுடையவனுடனே கூடிஆறில்நிற்கசெவ்வாய்பார்க்க அக்கினியிலகப்பட்டுச்சாவான்லக்கினாதிபதி ஏழாமிடமுடையவனுயிருக்கப் பாவிகளாற்பார்வைபெறக் கர்மாதிபதியுஞ்சஷ்டாதிபதியும்லக்கினத்திலிருக்கஸ்திரீநிமித்தம் விக்ஷபக்ஷணம்மரணம்-எ-று. (எ)

ஆலமாமிராகுகேதுகேந்திரத்திரிகோணத்தா
யேலமாயாறுன்விட்டானிருந்ததைப்பார்க்கவப்போ
சிலமாப்பிதுர்த்தானத்தான்காரணட்டமத்திற்சேரப்
பாலனுமா திலேறிப்படியிலேவிழுந்துமய்வான்

இ-ள். ராகுகேதுக்கள்கேந்திரத் திரிகோணத்தில்இருக்கஆருமிடமுடையவனாலே பாற்கப்படமித்துருத்தானாதிபதிகாரகனஷ்டமத்திலிருக்க மாத்திலேறிவிழுந்துமாணம்-எ-று. (அ)

மாயவனிரண்டாம்பிட்டான்களத்திரன்றேகனோடே
யாயவனிருக்கவேழான் பார்த்திடிற்றிரியான்மாய்வன்
றேயுமாமதியைராகு திருட்டிக்கத்தர்மனேழான்
றியவர்பாற்கிற்சேர்ந்த திரியினான்மாணஞ்செப்பே

இ-ள். இரண்டாமிடமுடையவனுங் களத்திராதிபதியும் ஆருமிடமுடையவனும்பாற்க ஒன்பதாமிடமுடையவனும் ஆதித்தனும்எட்டில்நிற்க மாத்திலேறிவிழுந்துமாணம்-எ-று (கூ)

சாத்தியதனத்தானேழான் சத்துருவுடனேகூட
மாற்றுவன்புகரேபாற்கமருந்திடுந்திரியான்மாய்வன்
சித்தமாமதியைராகு திருட்டிக்கக்கர்மநாதன்
றேற்றியுமேழான்கூடத் திரியினான்மாணஞ்சொல்லே.

இ-ள். இரண்டாமிடமுடையவன்ஏழாமிடமுடையவன் சந்திராதிபதியுடனே கூடசுக்கிரன்பார்க்க ஸ்திரீமருந்தினால்சாவான்சந்திரனைராகு பார்க்க ஏழாமிடமுடையவனுடனே காமநாதன்கூடஸ்திரீயினால்மாணம்-எ-று. (௰)

சொல்லியமதியாறெட்டுத் துவாதசஞ்சாரமேற்றி
வல்லனிலக்கினேசன் பார்த்திடிற்கபிற்றன்மால்வ
னல்லவனிலக்கினாதி லக்கினனுடனேயாகம்
புல்லியராகுபார்க்கப்பாவத்ரோகாணமும்போல்.

இ-ள். சஷ்டாஷ்டமவியங்களிற் சந்திரன்லக்கினாதிபதியாலே பாற்கப்பட்ட சனிகுளிகன்பார்க்கயிற்றினால் மாணமாம் அஷ்டமாதிபதியும் லக்கினாதிபதியுங் கூடியிருக்கராகுவாலேபார்க்கப்பட பாவதிரேகாணமேறக்கயிற்றினால்மாணமாம்-எ-று. (௰க

முன்னியமைந்தன்மாந்தி குருவுடன்மூன்றுங்கூடி
பன்னியவட்டமாதி பதியுடன்பார்வையாகி
தன்னிலேசனியுமெட்டாந் தானனைப்பார்க்குமாகி
லுன்னிபேயயிற்றிற்றெரங்கி யுயிர்தனைவிடப்பராமே.

